


சென்னை பார்க்கு வேடிக்கை:—சென்ற செவ்வாய்க்கிழமை காலையில் ஸ்ரீமதி ஜேம்ஸ் அவர்கள் சென்னை பார்க்கு வேடிக்கை விழாவைத் திறந்து வைத்த ஆரம்ப வைபவம்.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:


# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.





| தொகுதி | சுக்கில௵ தைமீ ௧௳ | பகுதி |
| --- | --- | --- |
| 15 | 1930௵ ஜனவரிமீ 14௳ | 7 |


## கடவுள் வணக்கம்.

தெருளாகி மருளாகி யுழலுமன மாய்மனஞ்
சேர்ந்துவளர் சித்தாகியச்
சித்தெல்லாஞ் சூழ்ந்தசிவ சித்தாய் விசித்திரமாய்த்
திரமாகி நானாவிதப்
பொருளாகி யப்பொருளை யறிபொறியு மாகியைம்
புலனுமா யைம்பூதமாய்ப்
புறமுமா யகமுமாய்த் தூரஞ் சமீபமாய்ப்
போக்கொடு வரத்துமாகி
இருளாகி யொளியாகி நன்மைதீ மையுமாகி
இன்றாகி நாளையாகி
என்றுமா யொன்றுமாய்ப் பலவுமாய் யாவுமா
யிவையல்ல வாயநின்னை
அருளாகி நின்றவர்க ளறிவதல் லாலொருவர்
அறிவதற் கெளிதாகுமோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மான பரமே. (1)

---

சகத்தின் வாழ்வைச் சதமென எண்ணியே
மிகுத்த தீதை விளைய விளைக்கின்றேன்
அகத்து ளாரமு தாமைய நின்முத்திச்
சுகத்தி னுள்வந்து தோய்வதெக் காலமே. (2)

---

ஆடுவதும் பாடுவதும் ஆனந்த மாகநின்னைத்
தேடுவது நின்னடியார் செய்கை பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் பரம்பொருளின் தன்மையையும் அதனை அறிபவர் தன்மையையும் விளக்குகின்றார்.

(இ-ள்.) இவ்வுலகமும் இதற்குப் புறம்பாயுள்ள உலகங்களும் உனக்குள் அடங்கும்படி ஏக பரிபூரணமாகி ஆனந்த சொரூபமான பரம்பொருளே! நீ எந்த ரூமாய் இருக்கிறாய் என்று யாவராலும் அறிய முடியாது. தெளிவாகியும் விளங்குகிறாய் மயக்கமாகியும் விளங்குகிறாய்! விஷயங்களில் சுழன்று திரியும் மனமாகியும், அந்த மனமானது சம்பந்தப்பட்டு வளர்வதற்குரிய அறிவாகியும் விளங்குகின்றாய். அந்த அறிவெல்லாம் சூழ்ந்த மங்களகரமான ஞானமாகியும் விளங்குகிறாய். இம்மட்டோ? ஆச்சரியமாகியும் உறுதியாகியும், பலவிதப் பொருள்களாகியும், அப்பொருள்களை அறிகின்ற பஞ்சேந்திரியங்களாகியும், அவைகட்கு விஷயமகாகிய ஐம்புலன்களாகியும், பஞ்சபூதங்களாகியும் இலங்குகிறாய். புறமும் அகமும், தூரமும் சமீபமும், போக்கும் வரவும், இருளும் ஒளியும், நன்மையும் தீமையும், இன்றும் நாளையுமாகி எக்காலமுமாக இருக்கிறாய். ஒன்றாகியும் பலவாகியும், எல்லாமே யாகியும், இவையாவும் அல்ல வாகியும் விளங்குகின்றாய். இத்தகைய நின்னை நின் திருவருட் பாத்திரர்களாகத் திகழும் ஞானிகள் அறிவார்களே யல்லாமல் வேறொருவர் அறிதல் சுலபமாகுமோ? என்பதாம்.

இதன் மூலம் "சர்வம் பிரம்ம மயம் ஜகத்" என்ற உண்மையை வகைப்படுத்திக்காட்டி, பரம் பொருளுக்குப் புறம்பான வஸ்து ஒன்றுமே இல்லை என்ற வேதாந்த ரகசியத்தை நிரூபித்திருக்கிறார். தெருள்—தெளிவு. மருள்—மயக்கம். சித்து—அறிவு. சிவம்—மங்களகரம்; திரம்—உறுதி.

2. இதனால், உலக போகங்களில் மூழ்கியிருக்கும் தமக்கு வீட்டின்பம் சித்திப்பது எந்த நாள்? என்று இரங்குகின்றார்.

சகத்தின் வாழ்வு—உலகபோகம். சதம்—சாசுவதம். ஆரமுது—கிடைத்தற்கரிய அமுதம். தோய்வது—படிவது.

3. இதனால் உண்மை அடியாரின் இலட்சணத்தை விளக்குகின்றார்.




## "குளிக்கப் போயும் சேற்றைப் பூசல்"

ஆன்மார்த்த விஷயத்தில் நமது பாரதகண்டமே உலகத்துக்கெல்லாம் ஆச்சாரிய ஸ்தானம் வகிக்கிறது என்ற உண்மையை மறுப்பவர் அநேகமாய் ஒருவரும் இல்லை என்றே சொல்லலாம். உலக போகமே வாழ்க்கையின் நோக்கம் என்று பெரும்பாலும் கருதிக்கொண்டிருக்கும் மேனாட்டாரிடையே ஸ்வாமி விவேகானந்தர் முதலிய மகான்கள் சென்று நமது மத தத்துவங்களின் மகிமையை விளக்கி நிலைநாட்டி விட்டு வந்தமை ஒன்றே நமது ஆன்மார்த்தத்தின் பெருமைக்குத் தக்க சான்றாகும். நமது நாட்டு நாகரிகம் ஆன்மார்த்தத்தை அடிப்படையாகக் கொண்டது. மேனாட்டு நாகரிகம் உலகியல் விவகாரத்தை அடிப்படையாகக்கொண்டது. நமது நாட்டை மஹரிஷிகள் நாடு என்றே சொல்லலாம். இங்குள்ள வேதங்கள், ஆகமங்கள், ஸ்மிருதிகள், புராணங்கள், இதிகாசங்கள், காவியங்கள், கதைகள், நாடகங்கள் எல்லாவற்றிலும் நமது முன்னோர்கள் அநுபவித்து அறிந்து லோகோபகாரமாக வெளிப்படுத்திய தத்துங்களின் விளக்கமே நிறைந்திருக்கும். மத சம்பந்தமற்ற எந்தக்காரியத்தையும் காண்பது அரிது. சுருங்கக் கூறுமிடத்து மேற்சொன்ன தத்துவப் பயிற்சியின் காரணமாக அஹிம்சாதருமமே நமது நாட்டுமக்களின் உன்னத லட்சியமா யிருந்தது. எனவே பரஸ்பர அன்பு, சகோதரத்துவம், சமத்துவம் முதலிய உயர் குணங்கள் நமது நாட்டில் நிறைந்திருந்தன என்று தனியாக விவரிப்பது அநாவசியம்.

வேற்றரசர் படையெடுப்பாலும் பிறகாரணங்களாலும் நமது வாழ்க்கையிலும் மத தத்துவங்களிலும் நாளாவட்டத்தில் மாசுபடி

யத் தொடங்கிவிட்டது. மூட நம்பிக்கைகளும், சாதி சமய வேற்று மைகளும், துராசாரங்களும் நாட்டில் வளர்ந்துகொண்டே வந்துவிட் டன. மததத்துவங்களின் உண்மைகள் எல்லாம் சாதாரண ஜனங் களுக்குத் தெரியாமலே போய்விட்டன. இதனால் முஸ்லிம் அரசர் கள் செல்வாக்கோடு ஆதிக்கம் பெற்றிருந்த காலத்தில் பாமரர்களா யிருந்த அநேக இந்துக்கள் இஸ்லாம் மதத்தில் சேர்ந்தனர். இப் போது ஆங்கில ஆட்சி ஆதிக்கத்தில் இருக்கிறது. இக்காலத்தில் மேனாட்டு பாதிரிகளின் பெருமுயற்சியால் ஆண்டுதோறும் ஆயிரக் கணக்கான மக்கள் கிறிஸ்தவ சமயத்தில் சேர்க்கப் படுகின்றனர். சமய சம்பிரதாயங்களில் தலை சிறந்து விளங்கிய நமது புண்ணிய பூமியில் இந்த மாதிரியான சம்பவங்கள் நிகழ்ந்து வருதல் தகுமா என்ற விஷயத்தை ஒவ்வொருவரும் சிந்தித்துப் பார்க்கவேண்டாமா? இதற்கெல்லாம் உண்மைக் காரணம் என்ன என்பதையும் ஒவ்வொரு வரும் ஆராயக் கடமைப்பட் டிருக்கின்றனர்.

தற்காலம் நமது நாட்டில் சாதிச்சண்டைகளும் சமயச்சண்டை களும் மிகுந்து வலிமைபெற்று வருகின்றன. பிறவியினால் உயர்வு தாழ்வு உண்டு என்ற மனோபாவமும், இந்த மதம் உயர்ந்தது, அந்த மதம் தாழ்ந்தது என்ற பிடிவாத எண்ணமும் உரம்பெற்று நிற்கின்றன. தாய்மொழிப் பயிற்சியோ, உண்மையான சமய சாஸ்திர அறிவோ ஜனங்களுக்குக் கிடையாது. மதப்பிரசாரத்துக்கு என்று ஏற்படுத்தப்பட்ட ஸ்தாபனங்கள் எல்லாம் ஆண்டுதோறும் அவற்றிற்கு வரும் பல லட்சக்கணக்கான பொருள்களைத் துர்விநி யோகம் செய்துகொண் டிருக்கின்றன. மக்கள் சமூகத்தில் பொரு ளற்ற போலிச் சம்பிரதாயங்கள் நிறைந்து முன்னேற்றத்துக்குத் தடையாகப் பலவிதத் தொல்லைகளை விளைத்து வருகின்றன. ஆங்கி லப் பயிற்சியின் பயனாக மேனாட்டு நாகரிகமே மக்கள் மனதை வெகு சகஜமாகக் கவர்ந்து வருகிறது. இந்த நாகரிகம் நமது பழைய வழக்க வொழுக்கங்களின் மீது ஒருவித வெறுப்பை உண்டாக்கிக் கொண்டு வருகின்றது. இந்த நாகரிகம் நமது மதத்தின் பேரால் அனுஷ்டானத்திலுள்ள—சமூக முன்னேற்றத்துக்குப் பெரிதும் தீமையை விளைத்துக்கொண்டிருக்கிற வழக்கங்களின்மீது வெறுப்பை உண்டாக்குவதைப்பற்றி நமக்குக் கவலை இல்லை. அவைகள் எப்படி யும் ஒழிந்தே தீரவேண்டும். ஆனால் அது நமது முன்னோர்கள் அருமையாகத் தேடிவைத்த ஞானக் களஞ்சியங்களையே அலட்சியம் செய்து விடும்படியான புத்தியையும் உண்டாக்கி வருவதுதான் நம க்கு வருத்தத்தைக் கொடுக்கிறது.

மனிதனுக்கு மதம் மிகவும் இன்றியமையாதது. மனிதனுக் குரிய இம்மை மறுமைப் பயன்களை அளிக்கவல்ல நல்லொழுக்க முறைகளே மதம் என்று கொள்ளலாம். மதம் மனிதனுக்குச்

சாந்தியைக் கொடுக்கின்றது. மத உணர்ச்சி இல்லாத மனிதனுக்கும் விலங்குக்கும் எத்தகைய வேற்றுமையும் இல்லை. உண்பதிலும், உறங்குவதிலும், விஷய சுகத்திலும் விலங்கும் மனிதனும் ஒன்றே. ஆனால் மனிதனுக்கு இயற்கையாக அமைந்துள்ள பகுத்தறிவின் பயனாக ஏற்பட்ட மதமே அவனைத் தெய்வத்தன்மை உள்ளவனாகச் செய்கிறது.

உலகத்தில் எத்தனையோ மதங்கள் இருக்கின்றன. அவற்றுள், அம்மதங்களைத் தழுவும் மக்கள் எண்ணிக்கையைக் கொண்டு பெரிய மதங்களாக இக்காலத்தில் வழங்கப்படுவன ஒரு சிலவே. இந்து மதம், பௌத்தமதம், இஸ்லாமியமதம், கிறிஸ்தவமதம் முதலானவைகளே இக்காலத்தில் பெருந்தொகையான மக்களால் தழுவப்படுகின்றன. ஒவ்வொரு மதத்திலும் சிறந்த—மக்கள் முன்னேற்றத்துக்குரிய—இன்ப வாழ்க்கைக்கு வேண்டிய உண்மைகள் நிறைந்திருக்கின்றன என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை. எல்லா மதங்களின் உண்மைகளும் அடிப்படையில் ஒன்றாயிருந்தாலும் காலதேச வர்த்தமானங்களுக் கேற்ப ஆசார அநுஷ்டானங்கள் மாறுபட்டு அம் மதங்களினின்றும் பிரிக்க முடியாத வகையில் ஒன்றாகி விளங்குகின்றன. ஒரு மதத்தார் அநுஷ்டிக்கும் ஒழுக்க வழக்கங்கள் இன்னொரு மதத்தாருக்குப் பொருந்துவது கஷ்டம். அறிவையும் குணத்தையும் விகாசப் படுத்தக்கூடிய நீதி போதனைகள் எம்மதத்திலிருந்தாலும் அவைகளை யாரும் கைக்கொள்ளுவதில் ஒன்றும் ஆட்சேபணை இல்லை. யாம் கூடாது என்று வற்புறுத்துவதெல்லாம், இன்னொரு தேசத்துக்குரிய ஒழுக்க வழக்கங்களை மதத்தின் பேரால் இவைதான் உண்மையானவை மற்றவை எல்லாம் போலி என்று இன்னொரு தேசத்தாருக்கு வற்புறுத்தக் கூடாதென்பதே.

அநேக வழக்க ஒழுக்கங்கள்—முற்காலத்தில் என்ன உத்தேசத்தோடு ஏற்படுத்தப்பட்டனவோ—அவை இக்காலத்தில் பொருளற்றவையாகி நிலவுகின்றன. நமது இந்து மதத்தின் பேரால் வழங்கப்படும் மூடப் பழக்கங்களைப் போலவே மற்ற இஸ்லாம், கிறிஸ்தவம், பௌத்தம் முதலான பெரிய மதங்களிலும் மூடப் பழக்க வழக்கங்கள் செறிந் திருக்கின்றன. விஞ்ஞான அறிவு தலைசிறந்து விளங்கும் இந்நாளில் மதத்தின் பேரால் வழங்கப்படும் அநேக வழக்க ஒழுக்கங்கள் விபரீதமாகவே தோன்றுகின்றன. ஆனால் இக்கால இயல்புணர்ந்த — அந்த அந்த மதத்தைச் சேர்ந்த அறிஞர் பலர் ஆசார சீர்திருத்தவிஷயத்தில் தீவிர சிரத்தை செலுத்தி உழைத்து வருகின்றனர்.

நமது நாட்டில் இப்போது அரசியல் கிளர்ச்சியானது பொது ஜனங்களின் உள்ளங்களைக் கவர்ந்து வருகிறது; அதிலும் இளைஞர்

களின் உள்ளங்களை வெகு தீவிரமாகக் கவர்ந்து கொண்டு வருகிற தென்று கூறலாம். உலகில் ஜனநாயகத்துவம் தான் இக்கால ராஜீய தருமமாயிருக்கிறது. இதைப் பெற்றுவிட ஒவ்வொரு அறிவுள்ள மனிதனும் துடித்துக்கொண் டிருக்கிருன் என்பதில் ஐயமில்லை. இந்த அரசியல் முன்னேற்றத்துக்குச் சமயமும் கடவுளும் தடையா யிருப்பதாகச் சாதாரணமாக அநேகர் நினைத்துக்கொண் டிருக்கின் றனர். இதனுல் கடவுளைப் பற்றியோ மதத்தைப் பற்றியோ அவர் கள் அவ்வளவு கவலையும் சிரத்தையும் செலுத்துவதில்லை. கடவுளைப் பற்றியும் மதத்தைப்பற்றியும் இத்தகைய எண்ணம் இந்த கோஷ்டி யினருக்குத் தோன்றிவிட்டமைக்குக் காரணம் மதத்தின் பேராலும் கடவுளின் பேராலும் வழங்கப்படும் சில மூடப்பழக்க வழக்கங்களே தான் என்று நாம் நினைக்கின்றோம். இதற்கு உதாரணம் ரஷ்ஷிய நாடே போதுமானது. அங்கு கடவுள் மறுப்புச் சங்கங்களும் கண் காட்சிகளும் வெகு தீவிரமாக நடைபெறுகின்றனவாம். மதத் திற்கே ஒரு சிறிதும் மரியாதை இல்லையாம். அதை ஒழிக்கவேண் டும் என்று அரசாங்கமே கங்கணங் கட்டிக்கொண் டிருக்கின்றதாம். நமக்கு இந்த துரதிர்ஷ்டமான வாழ்வு ஒருநாளும் வேண்டாம்.

தமிழ் நாட்டில் சமூக முன்னேற்ற விஷயத்தில் தீவிர பிரசாரம் நடைபெற்று வருகிறது. ஆனுல் அந்தப் பிரசாரம் பாமரமக்களைத் தப்பு வழியில் இழுத்துக்கொண்டுபோய் விடுவதாயிருப்பது விரும் பத்தக்கதாயில்லை.

நாட்டு விடுதலைக்கு முதலில் சமூக விடுதலை ஏற்படவேண்டும் என்ற அவர்களுடைய வாதத்தில் உண்மையிருக்கிறது. அதை யாரும் அநேகமாய் மறுப்பதற்கில்லை. ஆனுல் சமூக விடுதலைக்கு உழைப்பது எப்படி? கடவுள் தேவை இல்லை, மதம் தேவை இல்லை, கோவில்கள் தேவை இல்லை, எல்லாவற்றையும் ஒழிக்க வேண்டும் என்று பாமர ஜனங்களிடையே ஓயாமல் மேடைப் பிரசாரம் செய் வதன் மூலமா என்று கேட்கின்றோம்? இதனுல் நாட்டில் இயற்கை யாகவே நிலைபெற்றுள்ள வேற்றுமைகளோடு புதிய பிளவுகளையும் சண்டைகளையும் கொண்டுவந்து புகுத்துவதாகாதா? தக்க கல்வி அறிவின் மூலமாகவன்றோ மக்கள் உள்ளங்களில் சீர்திருத்த உணர்ச்சி ஏற்படவேண்டும்? இதற்கு இந்தச் சமூக சீர்திருத்தக் காரர் ஏதேனும் கடுகளவு முயற்சியாவது செய்கின்றனரா? என்று கேட்க விரும்புகின்றோம். நிற்க,

கடவுளிடமும் மதத்தினிடமும் நம்பிக்கை இல்லை என்று சொல் லிக் கொள்ளும் இவர்கள் ஒன்றும் அறியாத பாமர மக்களை வேறு மதத்தில் போய்ச் சேர்ந்து கொள்ளும்படி பிரசாரம் செய்து தூண்டு வது வேடிக்கையாயிருக்கிறது. இது முன்னுக்குப்பின் முரண் என்பது அவர்களுக்கு ஏன் தெரியவில்லையோ? இந்து சமூகத்தில் தற்காலம்

தாழ்த்தப்பட்டோர் நிலைமை மிகவும் பரிதாபகரமானது என்பதில் ஒரு சிறிதும் சந்தேகமில்லை. ஆனால் இந்து மதத்தில் தீண்டாமைக்கு அணுவளவும் இடமில்லை என்பது அறிஞர்கள் கண்டறிந்த உண்மை. பஞ்சமர்களுக்கு ஸ்ரீராமாநுஜர் கோபுரத்தின் மீதிருந்து ரகஸியார்த்தத்தை உபதேசித்திருக்கிறார். ஸ்ரீசங்கரர் பஞ்சமனை வணங்கினார். சைவமதத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பைச்சேர்ந்த எத்தனையோபேர் நாயன்மாராக வணங்கப்படுகின்றனர். பிற்காலத்தில் எப்படியோ இந்தக் கொடுமை இடைச் செருகலாக நுழைக்கப்பட்டு விட்டது. இதை ஒழுங்கான முறையில் ஒழிக்க முயற்சிப்பது தான் சீர்திருத்தக்காரர் செய்யவேண்டிய வேலையாகும். இதை விட்டு வேறு மதத்தைத் தழுவுமாறு தூண்டுதல் தற்கொலைக்கு ஒப்பாகும் என்று எச்சரிக்கின்றோம்.

யாம் முன்னர்க் குறிப்பிட்டபடி ஒவ்வொரு மதத்திலும் மூட நம்பிக்கையின் பயனாக உள்ள அநேக கொடுமைகள் வேரூன்றியிருப்பது பிரத்தியட்சம். சீர்திருத்தக்காரர் இந்த மூட வழக்கங்களை ஒழிக்க முயற்சிக்கும்போது அந்த அந்த மதத்தைச் சார்ந்த வைதிகர் எதிர்த்துக்கொண்டிருப்பதும் சகஜமாகப் பார்த்து வருகிறோம். இதே நிலைமையில் தான் நமது இந்து சமூகமும் இருந்து கொண்டு வருகிறது. இப்போது மக்களை வேறு மதத்தில் சேரும்படி தூண்டும் சீர்திருத்த வாதிகள், தாங்கள் எந்த மதத்தில் என்ன விசேஷத்தைக் கண்டு கொண்டிருக்கிறார்களோ, அந்த விசேஷம் நமது இந்து மதத்தில் இல்லை என்று நிரூபிக்க முடியுமா? என்று கேட்கின்றோம். இனிமேலாகிலும் இத்தகைய மோசமான—தீமை விளைக்கக்கூடிய பிரசாரம் புரியாமல் ஜனங்களுக்கு உண்மையான சீர்திருத்த உணர்ச்சி பிறக்கும்படியான துறையில் தங்கள் ஊக்கத்தையும் உழைப்பையும் செலுத்துமாறு டை தீவிர சமூக சீர்திருத்த வாதிகளைக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

சகோதரர்களே! இந்து தரும தத்துவங்கள் மிகப்புராதன காலந்தொட்டு பெருமை பொருந்தியவை என்பதை மேனாட்டாரும் ஒப்புக்கொண்டிருக்கின்றனர். நமது மதம் அன்பு, அருள், அறம், சகோதரத்துவம், சமத்துவம் முதலியவற்றை அஸ்திவாரமாகக் கொண்டது. இடைக்காலத்தில் வந்து புகுந்துவிட்ட களங்கத்தைக் கிரமமானவழியில் நீக்க முயலுவதே அறிவுடைமை. நமது இந் நன் முயற்சிக்குக் காலம் அநுகூலமா யிருக்கிறது. ஆதலால் நம்முடைய குறைகளை நமக்குள்ளேயே நாம் சரிபடுத்திக்கொள்ள வேண்டுமேயொழிய அந்நிய மதத்தில் சரண்புகுதல் அடாது. இங்ஙனம் செய்வது குளிக்கப்போய் சேற்றைப் பூசிக்கொள்ளுவதை ஒக்கும் என்று எடுத்துக் காட்டுகின்றோம். நம்முடைய நன்முயற்சிகளுக்குத் திருவருள் துணை செய்வதாக.

ஓம் தத் சத்.




# வேதாந்த சூடாமணி வசனம்.

(தமிழ்ப் பண்டிதர் பூ. ஸ்ரீநிவாசன்.)

கவனிப்பு:—விஷயங்களை மனதில் நன்கு பதியவைத்துக் கொள்ளுதற் கனுகூலமாயிருக்கும் பொருட்டுச் செய்யுள் வாக்கியங்கள் ஈண்டுக் காட்டப்படுகின்றன. செய்யுள் முழுவதையும் எழுதுவதை விட விஷயத்திற் கேற்ற வாக்கியங்களை மாத்திரம் காட்டுதும். அவை சிறு வாக்கியங்களாக விருத்தலின் மனனம் செய்தற்கும் எளிதாம். அன்றியும், செய்யுளைப் படிப்போர்க்குப் பொருள் காண்பதும் எளிதாகும்.

முன் சஞ்சிகையிற் கூறப்பட்ட விஷயங்களுக்குரிய வாக்கியங்களையும் இங்கு எழுதுவாம்.

(1) மங்களாசரணை மூவகை யென்பதற்கு

"வாய்த்த நூன்முகத்துரைக்கும் மங்களாசரணை வாழ்த்து வணக்கொடு வத்து நிர்த்தேசமென மூன்று."

(2) உரையினிலக்கணம் ஐந்து வகை என்பதற்கு,

"ஆர்த்தபதம் பதப்பொருளே வாக்கிய யோசனையே யறி வினாவிடையிவையைந் துரையி னிலக்கணமாம்."

(3) அந்வய இலக்கணம் ஐந்து என்பதற்கு,

"கோத்துரை செய் விசேட விசேடியங் கருத்தா கருமங்கொள் கிரியை யிவையைந் தந்நுவய விலக்கணமாம்."

இனி, நூலுக்கு இன்றியமையாது வேண்டப்படுவதாகிய அநுபந்த சதுஷ்டயம் உரைக்கப்படுகின்றது.

அநுபந்தமாவது:—தன்னை (அநுபந்தத்தை) வாசித்த பின்னர் முமூட்சுக்களை இந்நூலை வாசிக்க வேண்டுமென்று பிரவிர்த்தி யுண்டாக்குவது அதாவது நூலோடு சம்பந்தப்படுத்துவது.

அநுபந்த சதுஷ்டயம்:—

"சாற்று மநுபந்த சதுஷ்டய நூற்கு விடயஞ் சம்பந்தம் பயனதிகாரிகளென நான்கறியே."

அந்த அநுபந்தம் விஷயம், சம்பந்தம், பயன் (பிரயோஜனம்), அதிகாரி என நான்கு வகைப்படும்.

அவற்றுள்,

(1) விஷயம்.

"விடயமது சிவசீவர் தம தேகத்துவமாம்."

நூலிற் கூறப்படும் விஷயம் இன்னதெனக் கூறல் விஷயமாம். ஆகையால், இந்நூலிற் கூறப்படும் விஷயம் சிவசீவர்களின் ஐக்கியமாம். அதாவது ஜீவப் பிரஹ்ம ஐக்கியமாம்.

(2) சம்பந்தம்:—

"விமலனொடு நூற்கு அறையப்பட லறையுந்தன்மை யடைதலுறு சம்பந்தம்."

(சம்பந்தம்:—பிரதிபாத்தியப் பிரதிபாவக பாவசம்பந்தம், பிராப்பிய பிராபக பாவசம்பந்தம், கர்த்துரு கர்த்தவ்விய பாவசம்பந்தம், ஜனக ஜன்னிய பாவசம்பந்தம், சாத்திய சாதன பாவசம்பந்தம் என்பனவும் பிறவுமாம்.

ஓர் நூலுக்கும் அதிற் கூறப்படும் விஷயத்திற்கும் உள்ள சம்பந்தம் பிரதிபாத்தியப் பிரதிபாதக பாவசம்பந்தமாம். நூலை வாசித்தற்குரிய அதிகாரிக்கும் அவனால் அடையப்படும் பலனுக்கும் உள்ள சம்பந்தம் பிராப்பிய பிராபக பாவசம்பந்தமாம். அதிகாரிக்கும் அவனால் செய்யத் தகுந்த காரியத்திற்கும் அதாவது நூல் விசாரத்திற்கும் உள்ள சம்பந்தம் கர்த்துரு கர்த்தவ்ய பாவசம்பந்தமாம். நூலுக்கும் அதனாலுண்டாகும் ஞானத்திற்குமுள்ள சம்பந்தம் ஜநக ஜந்திய பாவசம்பந்தமாம். ஞானத்திற்கும் அதனாலடையப்படும் மோக்ஷத்திற்குமுள்ள சம்பந்தம் சாத்திய சாதனபாவ சம்பந்தமாம்.) ஆகவே, இந்நூலிற் கூறப்படும் விஷயம் பிரஹ்மமாகலின், பிரஹ்மத்திற்கும் இந்நூலிற்குமுள்ள சம்பந்தம் பிரதிபாத்தியப் பிரதிபாதக பாவ சம்பந்தமாம். விஷயத்தைச் சொல்லுவது-பிரதி பாதகம்; நூல். நூலிற் சொல்லப்படுவது- பிரதிபாத்தியம்; பிரஹ்மம்.

(இதனை ஆசிரியர் 'அறையப்படல் அறையுந்தன்மை' எனத் தமிழ்மொழியாற் குறித்த நயம் போற்றத் தக்கதாம். அறையப்படல்- பிரதிபாத்தியம்; அறையுந்தன்மை- பிரதிபாதகம்.)

(3) பிரயோஜனம்:—

"பயன், துயரெல்லாம் நீத்து ஆனந்தபதம் பெறுதல்."

இந்நூலை வாசிப்பதனாலுண்டாம் பயனாவது:—அனர்த்த நிவர்த்தி ஆனந்தப் பிராப்தியாம். (அனர்த்த நிவர்த்தி ஆனந்தப்பிராப்தி மோக்ஷத்தின் சொரூபமாம். எனவே, முத்தி பெறுதலே இக்கிரந்தத்தின் பிரயோஜனமாம்.)

(4) அதிகாரி:—

"சாதனம் நான்கினையு முடையவனே யதிகாரி."

நான்கு சாதனங்களை (சாதன சதுஷ்டயத்தை) யுடையவனெவனோ அவனே இந்நூலை வாசித்தற்குரிய அதிகாரி யாவான். ஏனையோர் அதிகாரிகளாகார்.

இனி, நான்கு சாதனங்கள் எவை யென்பதைக் கூறி விளக்குகின்றார்.

நான்கு சாதனங்கள் இவை என்பது.

"உரைத்த சாதன சதுட்டயம் நித்த அநித்தப்படு பொருளின் விவேகம், இகபரபோக விராகம், பழிப்பரிய சமை முமூட்சுத்துவம்."

(1) நித்தியாநித்திய வஸ்து விவேகம் (2) இகபரபோக விராகம் (3) சமை முதலிய ஆறு குணங்களை யுடைதல் (4) முமூட்சுத்துவம் என்பனவாம். இவற்றுள்

(1) "நித்தியமான்மாவே பொய் விடயமெலாம் எனத் தேர்நிலை தரு நித்தியா நித்தவத்து விவேகம்."

ஆன்மா வொன்றே நித்தியமாயுள்ளது; ஏனைய விஷயங்கள் (பிரபஞ்சம் முதலியன) எல்லாம் பொய் அதாவது அநித்தியம் எனப் பகுத்துணர்தலே நித்தியா நித்திய வஸ்து விவேகமாம்.

(2) "பின் மெத்திவரும் இகமொட முத்திரத்தில் வருபோக விராகம் இம்மை மறுமை யுளவிடய நுகர்வனைத்தும் பொய்த்தழியு மிடும்பை மயமென விடுதலாகும்"

முற்கூறிய நித்தியா நித்திய வஸ்து விவேகத்திற்குப் பின்னுண்டாகும் இகா முத்திரார்த்த பலபோக விராகமாவது: இம்மையிலும் (இவ்வுலகத்தும்) மறுமையிலும் (சுவர்க்காதி யுலகங்களிலும்) அனுபவிக்கத் தக்கனவாயுள்ள விஷய போகங்களெல்லாம் பொய்யா யழியத்தக்கனவும் துக்கமயமானவையு மாமென வறிந்து அவற்றினிடத்து இச்சை கொள்ளா திருத்தலாம்.

(3) "புகழ் சமையே முதலாய சட்குணங்கள் வைத்த சமை."

சமாதிசட்க சம்பத்தியாவது:—சமை முதலிய ஆறு குணங்களினடைவு.

(4) "முத்தி விருப்பதுவே வயங்கு முமூட்சுத்துவம்"

முமூட்சுத்துவமாவது:—முத்தியை யடைய வேண்டுமென்னும் விருப்பமாம்.

முன் சுருக்கமாகக் கூறிய சமை முதலியவற்றை இங்கு விளக்குகின்றார்.

"சமைதமையே திதீக்கை யுபாதி சிரத்தை சமாதி சமை முதலா மறு குணங்கள்."

சமை, தமை, திதிட்சை, உபரதி, சிரத்தை, சமாதி என்பவை சமை முதலிய குணங்களாம். இவற்றுள்.

(1) "உட்கரண மடக்கல் சமை." மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக்கரணத்தை யடக்குதல் சமை யெனப்படும்.

(2) "தமை தான் புறக்கரண மடக்குதல்" புறக்கரணங்களாகிய மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐந்திந்திரியங்களையு மடக்குதல் தமை யெனப்படும்.

(3) "காமாதி தணித்திடுகை திதிக்கை" காமம் முதலியவற்றைத் தணித்தல் திதிட்சை யெனப்படும்.

(4) "கருமங்களனைத்தினையும் சுமையெனவே விடுத லுபாதி." எல்லாக் கருமங்களையும் இவையும் பெரும் சுமையாக வுள்ளனவாம் என்றறிந்து அவற்றை விடுதல் உபரதி எனப்படும்.

(5) "சுருதி குருவைத் துணிவினால் நம்புவதே சிரத்தை." சுருதி வாக்கியங்களையும் குருவாக்கியங்களையும் இவை ஒருகாலும் பொய்யாக மாட்டா. சத்திய மொழிகளே யாம் என்று துணிந்து நம்புவதே சிரத்தை எனப்படும்.

(6) "குருமொழி நெஞ் சமை வுறவே திட்பமுறல் சமாதி." குருநாதர் உபதேசித்த வாக்கியத்தை மனத்தில் திடமாகக் கொள்ளல் சமாதி (சமஸ்தானம்) எனப்படும்.

இனி, சாதன சதுஷ்டய முடையவனாகிய அந்த அதிகாரியானவன் ஆசாரியனை யடுத்துச் சேவை செய்யவேண்டும். ஆதலின் குருசேவையின் தன்மையினைக் கூறுகிறார்.

"ஆத்தமுட னங்கமே தானஞ் சற்பாவமாம்."

குருசேவையானது ஆப்தம் அங்கம் ஸ்தாநம் சத்பாவம் என நான்கு வகையாம். அவற்றுள்;

(1) "குருபரனுக் கனுகூல விருத்தி யாத்தம்"

குருநாதனுக்குப் பிரிய முண்டாகும்படி நடத்தல் ஆப்தம்.

(2) "உயர் குருபரன் குற்றேவலே யங்கம்."

குருபரனது குற்றேவல்களைச் செய்தல்- அங்கம்.

(3) "அருட் குறவர்குரிய மனை நில முதலாமவற்றைக் காத்தலது தானமாம்."

குருபரனுக்குரிய வீடு நிலம் முதலியவற்றைப் பாதுகாத்தல்-ஸ்தானம்.

(4) "சற்குருவே மெய்யாக்கண்ட சிவமென நம்புமதுவே சற்பாவம்"
சற்குருவைச் சாக்ஷாத் பரமசிவமாகவே பாவித்தல்—சற்பாவம். வேதமானது கர்மகாண்டம் பக்திகாண்டம் ஞானகாண்டம் என மூன்று பிரிவினதா யிருத்தலின் அவற்றை யனுஷ்டிக்கும் அதிகாரிகளும் கர்மகாண்டி பத்திகாண்டி ஞானகாண்டி என மூவகைப்படுவர். அவர்களுள்,

(1) கர்மகாண்டி:—"உடம்பினையும் வரு குடும்பந்தனையும் யான் எனதென்றுளன் கருமகாண்டி." தானல்லாத உடலைத் தான் என்றெண்ணுதலாகிய அகங்காரத்தையும், தன்னுடையதன்றாய், ஆனால் உடலைப்பற்றினதாயுள்ள குடும்பத்தை எனது என்று அபிமானித்தலாகிய மமகாரத்தையும் உடையவன் கர்மகாண்டி.

(2) பத்திகாண்டி:—"எல்லாக்கிரியையு மீசற்கே திடம்பெற நின்றாக்குமவனே பத்திகாண்டி" தான் செய்யும் கிரியைக ளனைத்தையும் அவற்றின் பயனையடைதல் வேண்டுமென்னும் விருப்பமின்றி (நிஷ்காமியமாய்) ஈசுவரார்ப்பணமாகச் செய்வோன் பக்திகாண்டி.

(3) ஞானகாண்டி:—"செயுங் கருமமனைத்தினுக்குங் கரிதானென்றிருப்போன் மடந்தவிரும் நன்ஞானகாண்டி யெனலாகும்" எந்தக் காரியமும் என்னால் செய்யப்படுவ தின்று. அவை சரீரம் மனம் முதலியவற்றின் தொழில்களாம். நான் அவையனைத்திற்கும் சாக்ஷிமாத்திரமே யாவேன் என்றுள்ளபடி யறிந்து அந்நிலையிலேதானே திடமாக விருப்பவன் ஞானகாண்டி.

இவர்களேயன்றி கருமி, முமூட்சு, அப்பியாசி, அனுபவி, ஆரூடன் என்று அழைக்கப்படும் அதிகாரிகளு முளர். இவர்கள் முறையே ஒருவர்க்கொருவர் உயர்ந்தோ ராவர். இவர்களுள்,

(1) கருமி:—"மூடமொடு தன்சாதி கருமமேபற்றி முத்தனு மவனூறு பிறப்பினிலொண் கருமி" மூடத்தனத்தால் தன் சாதிக்குரிய கருமங்களைத் தவறாது செய்வதே சிறப்பா மெனக்கருதி அவ்வாறு செய்து வருபவன் கருமி. இவன் நூறுபிறவியில் முத்தனுவான்.

(2) முமூட்சு:—"நீடுலக மின்மையென நினைந்து புறக்கரும மிட்டனுய் முப்பிறப்பின் முத்தனுமவனே நாடரியமுமூட்சு." இப்பெரிய உலகம் அசத்துப் பொருளாம் என நினைத்து பாகிய கருமநிஷ்டை யுடையவனு யிருப்பவன் முமூட்சு. இவன் மூன்று பிறவிகளில் சீவன் முத்தனுவன்.

(3) அப்பியாசி:—"உலகங் கனவெனக் கண்டுள்ள நற்கருமஞ் சேர்ந்து பிறப் பிரண்டுள னப்பியாசி." இவ்வுலகம் சொப்பன வுலகம் போன்றதா மென்றுணர்ந்து இயானுப்பியாசஞ் செய்யு முள்ள முடையவனு யிருப்போன். இவன் இரண்டு பிறப்பில் சீவன் முத்தனுவன்.

(5) அனுபவி:—"வீடுலக விவகாரம் நினையாமல் விவேக மேவியோர் பிறப்பினுன் முத்தனனுபவியே." தன்னால் விடப்பட்ட உலக விவகாரத்தை மீட்டும் நினையாமல் ஆத்ம அநாத்ம விவேக மடைந்திருப்போன். இவன் ஒரு பிறவியில் முத்தனுவன்.

(5) ஆரூடன்:—"உலக நிலை தோன்றுமற் றன்றிகழ் ஞானத்தாலுண்மை முத்தனுமவனே யாரூடன்." உலக நிலையைச் சிறிதும் அறியாமல் தன் ஆத்மாவில் நிலைத்திருப்பவன். இவன் இப்பிறவியேலேயே சீவன் முக்தனுவன்.

## சந்தா நேயர்களுக்கு

நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகை ஒவ்வொரு தமிழ் மாத முதல் தேதியிலும் எக்காரணத்தை முன்னிட்டும் நிறுத்தப்படாமல் தபாலில் சேர்க்கப்பட்டு வந்தும் சிலர் சஞ்சிகை கிடைக்கவில்லை என்று எமக்கு அடிக்கடி தெரிவிக்கின்றனர். இந்த நண்பர்கள் அந்த அந்த ஊர் போஸ்டு மாஸ்டருக்கு விஷயந் தெரிவித்தால் சஞ்சிகைகள் ஒழுங்காகக் கிடைத்து வரும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

ப-ர்.

# தமிழ்மொழியின் பெருமை

—————(o)—————

(பேரா. திருகூடசுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்.)

*வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி*
*வாழிய வாழியவே*
*ஏழ்கடல் வைப்பினுந் தன்மணம் வீசி*
*இசைகொண்டு வாழியவே.* (பாரதி.)

உலகத்திலுள்ள பல நாட்டாருள்ளும் தமிழ் நாட்டாருக்குத் தங்கள் தாய்மொழியாகிய தமிழ் மொழியினிடம் அன்பு அதிகம் என்றும், அவ்வன்பின் மிகுதியால் தங்கள் தாய்மொழியே சகல மொழிகளிலும் தலைசிறந்தது என்று பெருமை பேசி வருகின்றனர் என்றும், தமிழ் மொழியின் சிறப்பிற்கு அவர்கள் கூறும் காரணங்கள் புராண சம்பந்தமான காரணங்கள், சரித்திர சம்பந்தமான காரணங்கள் என இருவகைப்படும் என்றும், அவற்றில் புராண சம்பந்தமான காரணங்கள் எல்லாம் தமிழ்மொழி கடவுளாலேயே சிருஷ்டிக்கப்பட்டது, அதன்பால் கடவுளுக்கு அளவு கடந்த அன்புண்டு, அதனால் அவர் அது பயிலும் புலவர்க்காகப் பல அற்புதங்கள் செய்துள்ளார் என்னும் மூன்றிலும் அடங்கும் என்றும், ஆகையால் அம்மூன்று காரணங்களையும் தனித்தனியே ஆராய வேண்டியது அவசியம் என்றும் இதற்கு முன் எழுதிய வியாசத்தில் கூறியிருந்தேன்.

அதோடு அம்மூன்று காரணங்களில் முதல் இரண்டையும் தனித்தனியே ஆராயவும் செய்தேன். அவ்வாராய்ச்சியின் பயனாய் நாம் அறிந்து கொண்டதென்ன? அவ்விரண்டு காரணங்களையும் நாம் சரியானவை என்று ஒப்புக்கொள்ள முடியாது என்பதே. அவைகள் சம்பந்தமாய் எழும் ஆட்சேபங்களின் சாராம்சமாவது:—

## கடவுள் சிருஷ்டி

(1) எந்த பாஷையும் கடவுளால் சிருஷ்டிக்கப் படுவதன்று. அது மனிதவர்க்கத்தார் அடிக்கடி நெருங்கிப் பழகுவதன் பயனாய் நாளடைவில் சிறுகச் சிறுக உருப்பெற்றுத் தானாகவே உண்டாவதாகும்.

(2) கடவுளே பாஷைகளைச் சிருஷ்டித்தனர் என்று வைத்துக்கொண்டாலும், அவர் ஏன் தமிழ் பாஷையை மட்டும் சிருஷ்டிக்க வேண்டும்; ஏனைய பாஷைகளைச் சிருஷ்டியாது விட்டுவிட வேண்டும் என்னும் கேள்வி பிறக்கும்.

(3) கடவுள் தமிழ்மொழியை மட்டும் சிருஷ்டித்திருந்தால் அவருக்கு ஏனைய மொழிகளைச் சிருஷ்டிக்க வல்லமை இல்லை என்றாவது, அல்லது ஏனைய ஜாதியார் பாஷைகளை உண்டாக்கிக் கொண்டதுபோல் தமிழ்நாட்

டாருக்குத் தங்கள் பாஷையை உண்டாக்கிக்கொள்ள வல்லமையில்லை என்றுவது ஏற்படும்.

## கடவுள் அன்பு அதிகம்

(1) கடவுள் எல்லா ஜாதியாரையும் படைத்திருந்தால் அவருக்கு எல்லா ஜாதியாரிடமும் ஒரே விதமான அன்பு இருக்கவேண்டுமே. அங்ஙனமிருந்தால் தமிழ்நாட்டாருக்கு மட்டுமே பாஷையைச் சிருஷ்டித்து உதவினர் என்று கூறமுடியுமோ?

(2) தமிழ் நாட்டாரிடமும் தமிழ்பாஷையினிடமும் அவருக்கு விசேஷ அன்பு இருக்கக் காரணம் என்ன? காரணம் போதுமான அளவு இல்லாவிடில் கடவுள் பட்சபாத குணமுள்ளவர் என்று ஏற்படுமன்றோ?

(3) தாம் சிருஷ்டித்ததால் தமிழ் மொழியினிடம் அன்பு அதிகம் என்று கூறினால் கடவுள் சுயநலப் பற்றுள்ளவர் என்று ஆட்சேபிக்க வேண்டியதாகும்.

## அற்புதங்கள் செய்தமை

இனி மூன்றுவது காரணத்தை ஆராய்வோம். பொதுவாகக் கூறுமிடத்து இக்காலத்து அறிவாளிகளுக்கு அற்புதங்களிலும் சித்துக்களிலும் அணுவளவும் நம்பிக்கை கிடையாது. எந்த விஷயமானாலும் அதனதன் குண தோஷங்களை வைத்துத்தான் அதனதன் ஏற்றத்தாழ்வை மதிக்க வேண்டுமேயன்றி அதனதன் சம்பந்தமாய்ப் புராண வாயிலானும் கர்ண பரம்பரை வாயிலானும் கூறப்படும் அற்புதங்களைக்கொண்டு மதிக்கக்கூடாது என்பது அவர்களுடைய முடிவான அபிப்பிராயம். அதுவே சரியானதுமாகும். உண்மையில் பெருமை பேசத் தகுந்த குணங்கள் அமையப்பெறாத ஒன்றைப் பெரியாரொருவர் புகழ்ந்து விட்டார் என்பதற்காக அதைப் போற்றுதல் கூடாது. புகழ்ந்தவர் பெரியவரா யிருக்கலாம்; ஆனாலும் அவருடைய புகழுரை பிசகானதாகவு மிருக்கலாம். ஆகையால் தமிழ் மொழியின் பெருமைக்கு முன்னோர் கூறும் அற்புதங்களாகிய காரணம் மட்டுமே ஆதாரமா யிருக்குமானாலும் தமிழ்மொழி பெருமையுடையதாகக் கொள்ள முடியாது. அற்புதங்களைத் தவிர பாஷைக்கு உண்மையில் பெருமை தரக்கூடிய வேறு பல குணங்கள் அமைந்திருக்கவேண்டும். அங்ஙனம் அமைந்திருந்தால் மட்டுமே தமிழ்பாஷை நம்மால் மட்டுமின்றி பிற நாட்டாராலும் போற்றத் தகுதியுடைய தாகும்.

தவிர, தமிழ் பாஷைக்காகக் கடவுள் முன்னாளில் பல அற்புதச் செயல்கள் செய்திருந்தால் அத்தகைய செயல்களை அவர் ஏன் இக்காலத்திலும் இயற்றக் காணோம்? தமிழ்மொழி இளமை இழந்து முதுமை அடைந்து விடவில்லையே. தமிழ் மொழியில் முன்காலத் திருந்த சுவைகள் குன்றிவிடவில்லையே. "சீரிளமைத் திறம்" இன்னும் சிறிதேனும் குறையாது இருப்பதாக வல்லவோ தமிழ்ப் புலவர்கள் தினந்தோறும் நாடெங்கும் பறைசாற்றி வருகின்றனர்.

தொண்டர் நாதன் தூதுசென்றது, முதலையுண்ட பாலனை அழைத்தது, எலும்பு பெண்ணுருவாச் செய்தது, மறைக்கதவினைத் திறந்து அடைத்தது, வைகையிலே ஏடு எதிரேறிச் செல்லும்படி செய்தது, நெருப்பிலே ஏடு நீறாகாதிருக்க நியமித்தது முதலிய அற்புதங்கள் தமிழ்மொழியின்பா

லுள்ள அன்பினால் மட்டுமே அருளிச் செய்யப்பட்டனவா, அல்லது அவற்றிற்கு வேறு காரணங்கள் உண்டா? முன்னோர் கூறியதும் இன்றையோர் கூறிவருவதுமான அற்புதங்களை எல்லாம் ஆராய்ந்து பார்த்தால் அவைகள் செய்யப்பட்டதாகக் கூறப்படுவதற்குத் தமிழின்பா லுள்ள அன்பு காரணமன்று என்பது தெளிவாகும். அப்படியானால் அவ்வற்புதங்களை ஆண்டவன் ஆற்றியதற்கு வேறு காரணங்கள் எவை எனில் அக்காரணங்கள் அநேகமாக மூன்று இனத்தைச் சேர்ந்தவைகளாகும்.

## பக்திக்காதல்

சில அற்புதங்கள் சில புலவர்களின் தெய்வ பக்தியின் காரணமாகச் செய்யப்பட்டனவாகும். வேதாரணியத்தில் கதவு திறந்ததும் அடைத்ததும் அப்பர் சம்பந்தர் பாசுரங்கள் தமிழில் அமைந்திருந்ததனாலன்று; அவ்விருவரின் பக்தி விசேஷத்தினாலேயே. அவர்கள் கடவுளுக்குச் செய்து கொண்ட வேண்டுகோள் செய்யுளுருவம் அமையப்பெறா விட்டாலுங்கூட ஆண்டவன் அவர்களுடைய பக்தியில் ஈடுபட்டு அவ்வற்புதத்தைச் செய்திருப்பான் என்பதில் ஐயமில்லை. அவர்கள் தங்கள் வேண்டுகோளைத் தமிழில் கூறாமல் வேறு பாஷையில் கூறியிருந்தாலும் ஆண்டவன் அருளைப்பெற்றே யிருப்பர் என்பது நிச்சயம். இது போலவேதான் தூதுசென்றது, பாலனை அழைத்தது, பெண்ணுருவாச் செய்தது, பூதவிடுதலை கொடுத்தது முதலிய அற்புதங்களின் காரணமுமாகும்.

## உண்மைக் காரணம்

சில பாசுரங்கள் சம்பந்தமாய்ச் செய்யப்பட்ட அற்புதங்களுக்குக் காரணம் அவை தமிழில் செய்யப்பட்டிருந்தமை அன்று, அவை அழியா உண்மைப் பொருளை அடக்கிக்கொண் டிருந்தமையே யாகும். சம்பந்தர் தீயில் இட்ட ஏடு வேகாது பசுமையா யிருந்ததற்கும் ஆற்றில் இட்ட ஏடு ஆற்றோட்டத்திற்கு எதிரே ஏறிச் சென்றதற்கும் காரணம் என்ன? அவ்வேடுகளில் எழுதியிருந்த பாசுரங்களின் பாஷை தமிழ் என்பதா அல்லது அவைகள் அடக்கியுள்ள பொருள் உண்மை என்பதா? சம்பந்தர் வரைந்த கவியின் பொருள் சம்ஸ்கிருத பாஷையில் விளக்கப்பட் டிருந்தால் ஏடு எரிந்து போயும் ஏறாதுபோயும் இருக்கும் என்று யாரேனும் கூற முடியுமோ?

சிலர் இதைக்கூட உண்மைக் காரணமாக ஒப்புக்கொள்ள மாட்டார். அற்புதம் நடந்தது அவ்வேட்டில் எழுதப்பட்ட பாசுரத்தின் உண்மைப் பொருளின் காரணமாக என்றால் அப்பாசுரத்தை இப்பொழுது ஒரு ஏட்டில் எழுதி நீரிலும் நெருப்பிலும் இட்டால் முன்போல் நடக்குமோ? அதனால் அற்புதங்கள் நிகழ்ந்தமை அவ்வடியார்களின் பக்தி விசேஷத்தினாலேயே யாகும் என்று கூறுவர்.

## கவிநயம்

கவிநயம் சில அற்புதங்களுக்குக் காரணமாகும். சில சமயம் கவிநயத்தோடு கவியின் பக்தி மிகுதியும் சேர்ந்திருக்கும். ஆனால் அற்புதங்கள் எதுவும் அவைகளுக்குக் காரணமாயிருந்த கவிகள் தமிழ்மொழியில் செய்யப்பட்டிருந்த காரணத்தால் உண்டாக்கப்பட்டவை அன்று. கம்பர் கவியைக்கேட்டு நரசிம்மச் சிலை சிரக்கம்பம் செய்தமையும் வில்லிபுத்தூராழ்

வாரின் பாரதப்பாக்கள் பருகி அவருக்குக் கண்கள் நல்கியமையும் ஒட்டக் கூத்தரின் ஈட்டி எழுபது கேட்டு அவரைப் பூதத்தினின்று விடுத்தமையும் ஔவையார் கவிக்காகக் கூழைப்பலாத் தழைத்தமையும் உதாரணங்களாகும்.

ஆகையால் மேற்கூறிய அற்புதச் செயல்களை ஆண்டவன் தமிழ்பாஷையினிடமுள்ள அன்பின் மிகுதியால் செய்தருளினன் என்று சொல்வது தவறு. பாடியவர்களின் பக்தி, பாடிய பாட்டுக்களின் கவிச்சுவை ஆகியவைகளில் ஏதேனும் ஒன்றிற்காகவோ அல்லது இரண்டு மூன்றிற்காகவே தான் செய்தான் என்பது வெளிப்படை.

## பிறபாஷை அற்புதங்கள்

தமிழ் நூல்களில் அற்புதச் செயல்கள் காணப்படுகின்றன. அதனால் வேறுபாஷை நூல்களில் அவை இல்லையா என்று கூறமுடியுமோ? நன்றாய்க் கவனித்தால் அற்புதச் செயல்கள் என்பவை இவ்வுலகில் காணப்படும் எல்லா பாஷை நூல்களிலும் ஏராளமாகக் கூறப்பட்டிருக்கின்றன என்பது தெளிவாகும். எல்லா தேசங்களிலும் அற்புதங்கள் காணப்படுமானால் அற்புதங்களைக்கொண்டு தமிழ்மொழிக்கு ஏற்றம் கூறுவது எங்ஙனம்?

இதர பாஷைகளில் காணப்படும் அற்புதங்களையும் சற்று ஆராய்ந்து பார்த்தால் அவைகள் தமிழ் மொழியில் போலவே மொழியின் பெருமையைக் காட்டாமல் அவற்றிற்குக் காரணமாயிருந்த கவிகளின் பக்தி முதலியவைகளையே காட்டுவதாகும் என்னும் உண்மையை எளிதில் அறிந்து கொள்ளலாம். இயேசு கிறிஸ்துநாதர் புயல்காற்றை அதட்டினர், அவை அடங்கி விட்டன. அங்ஙனம் அடங்கியதற்கு அவர் அதட்டிச் சொல்லிய பாஷை ஹீப்ரு என்பது காரணமன்று; அவருடைய அளவில்லாத பக்தி வன்மையேயாகும்.

இன்னொரு விஷயம், தமிழ் பாஷையில் செய்யப்பட்டதாகக் கூறப்படும் அற்புதங்கள் எல்லாவற்றிற்கும் காரணமான சொற்கள் எல்லாம் செய்யுட்களாகவே இணைக்கப்பட்டிருந்தன. ஆனால் ஏனைய பாஷைகளில் கூறப்படும் அற்புதங்களான சொற்றொடர்கள் செய்யுள் நடையாக அமைக்கப் பெறவில்லை; உரை நடையாகவே அமைந்திருந்தன. செய்யுள் நடை வேண்டப்படாது உரை நடைக்கே அற்புதச் செயல்கள் பிறபாஷைகளில் நிகழ்ந்திருக்குமேல் தமிழ் பாஷையிலும் பிறபாஷைகளே பெருமையுடையன என்று கூறவேண்டியதாகும்.

ஆகையால் இத்தகைய காரணங்களால் அற்புதச் செயல்களைக்கொண்டு தமிழ் பாஷையின் பெருமையை நிலைநாட்ட முற்படுவது பேதமை என்பது தெளிவாகும். ஆகவே முன்னோர் மொழிந்த புராண சம்பந்தமான காரணங்கள் மூன்றும் முற்றிலும் ஆட்சேபத்திற்கு இடமானவை. தமிழின் சிறப்பிற்கு அவை அணுவளவும் ஆதாரமாகா. அத்தகைய ஆன்றோர் காரணங்களை அகற்றிவிட்டால் இக்காலத்தவர் இயம்பும் சரித்திரக் காரணங்கள் ஏற்றுக்கொள்ளத் தக்கவைதாமோ என்று கேட்கக் கூடும். அக் கேள்விக்கு அடுத்த வியாசத்தில் விடை பகர்வேன்.

---

# திருவள்ளுவர்.

——:(o):——

S. கிருஷ்ணஸ்வாமி ஐயர், பி.ஏ., பி.எல்.

இவ்வுலகின்கண் ஒவ்வொருவருக்கும் கதியாவார் உளர். குழந்தைக்கு கதி தாய் தந்தையர், குலமகட்கு கதி கொழுநனே, குடிகட்குக் காவலனே கதியாவான், யாவர்க்கும் எல்லாம் வல்ல, எங்கும் நிறைந்த, யாவுமுணர்ந்த, இறையே கதி. அதைப் போன்றே, அமிழ்தினுமினிய நந்தமிழ்மொழிக்குக் கதியாவார் இருவர். 'கதி' என்ற பதத்தின் ககரத்தைக் கம்பருக்கும், திகரத்தைத் திருவள்ளுவருக்கும் தரின் சாலப் பொருந்தும். ஆதலின் கம்பரும் திருவள்ளுவரும் தமிழணங்கின் இரு கண்களாய் அமைந்தனர்.

கம்பரின் பெருமையைக் குறித்துப் பிறிதொருநாள் கருதுவோம்; இன்று திருவள்ளுவரின் திறத்தைச் சிறிது ஆராய்வாம்.

எண்ணுதற்கும் ஆக்குதற்கும் அரிய அவரது திருக்குறள் என்ற நூலின் அருமை பெருமைகளைப் பெரிதும் பாராட்டி வரைந்துள்ளனர் கற்றறிந்த பெரியாரிற் பலர். முப்பானூலென்றும், தெய்வநூல் எனவும், பொய்யா மொழி யென்றும், தமிழ்மறை யெனவும், பொதுமறை என்றும் பல காரணப் பெயர்களால் விவரிக்கப்பட்டு விளங்கும் அவரது நூல் இற்றைக்கு சுமார் 2,000 ஆண்டுகட்கு முன்னர் இயற்றப் பெற்றதாம்.

> 'நாற்பொருட் பயத்தோ டெழுமதந் தழுவி
> ஐயிரு குற்றமு மகற்றியம் மாட்சியொடு...'

என்றபடி நான்கு புருஷார்த்தங்களையும் படைத்து, பத்துக் குற்றங்களை யகற்றி, பத்து அழகுகளைப் பெற்று, அதுவரை மாந்தராற் கேட்கப்படாது, மனத்தை ரஞ்சித்துப் பரவசமாக்கும் மாண்போடு, கேட்டார் சென்னி வணங்கவும், வாய் வாழ்த்தவும், நெஞ்சம் சிந்திக்கவும், செவி பருகவும், அத்துணைப் பெருமை வாய்ந்த தெய்வப் புலவரின் நூலினை அக்காலத்துக் கல்விக் கழகத்தார் எளிதில் ஏற்றனரா? எக்கல்லூரியிற் கல்வி பயின்றாரென்றும், எவ்வாசானிடம் பாடங் கேட்டாரென்றும் உணராத அன்னார் அவர் நூலைக்கண்டு துண்ணென்றார் என்பதும், அதன் பெருமையைத் தெய்வச் செயலால் தெரிந்த பின்னர் யாவரும் ஏத்தி உச்சிமேல் வைத்து மெச்சத் துவக்கின ரென்பதும் பிரசித்தம்.

அக்காலத்தில் தென்னிந்தியா நீர்வளம், நிலவளம், கல்விவளம், செல்வ வளம் முதலிய பல்வளம் மலிந்து ஓங்கி வளர்ந்து சிறந்து பொலிவுற்றிருந்தது. சென்னாப் போதார் எச்சமயத்தைச் சேர்ந்தாரென்பதும், அவரது சரித்திரத்தின் முழுப்பாகமும் தெரியவில்லை. ஆனால் அவர் கடவுளன்பு மிக்க மகாஞானி என்பதுமட்டும், மழுமானேந்திய மங்கைபங்கன் மன்றத்து மறைச் சிலம்படிகள் மாறியாடியதின் இரகசியத்தைத் தேவர்கட்கு வெளியாக்கியதினின்றும் புலப்படா நிற்கின்றது. சென்னையில் தற்போது சட்ட நிபுணர்கள் தக்க இனிய இல்லங்கள் அமைத்துக்கொண்டு வாழும் மைலாப்பூரில் அவர் வாழ்ந்து வந்தனரென்பது தெரிகின்றது. இன்றும் அங்கு நின்று விளங்கும் அவரது சிறிய கோயிலொன்றே அவரை மக்கள் எங்ஙனம் மதிக்கின்றனர் என்பதைக் காட்டுகின்றது.

பண்டைக்கால ஏனைய புலவர்களைப் போன்றே நமது நாயனாரும் மக்களின் சுதந்தரத்தைக் காட்டிலும் கடமைகளையே முதன் முதல் எடுத்துக் கூறுகின்றார். எய்தற்கரிய மானிடப் பிறவியைப் பெற்ற மக்கள் கடவுள் மாட்டும், தம் குடும்பத்தார்பாலும் பிறரிடத்தும் செய்யக் கிடக்கும் கடமைகளைச் செவ்வையாய்ச் செப்புகின்றனர். தமது முதல் அதிகாரத்திலேயே,

‘ அகரமுதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு ’

என்ற அழகிய மங்கலச் செய்யுளைச் சொல்லி, பிறகு ‘ வாலறிவன் ’ ‘ மலர்மிசை யேகினான் ’ ‘வேண்டுதல் வேண்டாமையிலான் ,’ ‘ தனக்குவமை யில்லாதான் ’ ‘ அறவாழி அந்தணன் ’, ‘ எண்குணத்தான் ’, ‘ இறைவன் ’ என்ற உயரிய பதங்களைப் பெய்து ஒப்புயர்வில்லா அப்பரம்பொருளை வழுத்தி, அல்லும் பகலும் அனவரதமும் அன்னானை உள்ளம் உரை செயல்களார வாழ்த்தி லதினல்லால் இப்பிறவிப் பெருங்கடல் நீந்தி உய்தலரிதென்பதைத் தெற்றெனப் புலப்படுத்தி யிருக்கின்றனர்.

பிறகு சொற்சுவையும் பொருட்சுவையும், அழகும் இனிமையும் வாய்ந்து உள்ளத்தையும், உணர்ச்சியையும் பரவசமாக்கும் குறட்பாக்களால் இல்வாழ்க்கையின் பெருமையும், இன்பமும் சொல்லப்படுகின்றன. பிரமசரியம் கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்ற நான்கு ஆஸ்ரமங்களில் இல்லறமே எவ்வாற்றானும் சிறந்தது என்பது ஆசிரியர் துணிபு. வென்றுளே புலன்களைந்து மெய்யுணர் உள்ளம் படைத்த துறவிகளின் மாண்பைப் பெரிதும் பாராட்டிப் போற்றினும், நமது புலவர் இல்லறத்தான் வாழ்க்கைக்கு இணை எதுவுமின்றென இயம்பா நிற்கின்றனர். ஏனெனின் இல்வாழ்வான் ஏனைய மூன்று நிலை நின்றார்க்கும் நற்றுணைவன். அனாதைகட்கும், தரித்திரர்கட்கும், இறந்தார்க்கும் அவன் ஓர் பெருங்களைகண். தென்புலத்தார், தெய்வம், விருந்தினர், உறவினர் இவர்கட்கும் இன்றியமையா ஆதரவு. வாழ்வாங்கு வாழின் இல்வாழ்வான் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படுவான். இல்

லறத்தில் இருக்கவேண்டிய முறையில் இருப்பின், பிறவழிகளிற் போய்ப் பெறக்கிடைக்கும் பயன் பிறிதொன்றுமில்லையாம்.

இவ்வாறு இல்லறத்தை இனிதே இயற்ற இணையில்லாத் துணைவி இல்லாள். நம்தேசத்தின் நாகரிகத்தின் உயர்வையும், நூற்களின் நுட்பத்தையும், கல்விப்பயிற்சியின் இயல்பையும் திறத்தையும், பெரியாரின் பெருமையையும், தலத்திற் சிறந்தாரின் தன்மையையும், இறைவர்களின் மாட்சிமையையும், கடுகளவேனும் கண்டறியா இக்காலத்தில் ஆங்கிலங்கற்றவர்களிற் சிலர் நம் தேசத்துப் பெண்களை ஆடவர் அடிமைகளைப்போன்றே நடத்தினரெனப் பிதற்றுவது எத்துணைப் பேதமையைத் தெரிவிக்கின்றது! இல்லறதருமத்தை இடையூறின்றி நடத்தப்போதிய நற்குண நற்செய்கை வாய்ந்த துணைவியன்றோ இல்லாள். தங்கள் ஒழுக்கத்தாலும், கணவனைப்பேணி அவன் தருமங்களைச் செவ்வனே செய்ய உதவுதலாலும், தாங்களும் தங்கள் கணவர்களும் புகழெய்திப் புண்ணியமெய்திப் பொலியச் செய்ய வல்லாரன்றோ வனிதையர்? காதன் மனையாளும் காதலனும் மாறின்றி யல்லவா தீதில் ஒரு கருமத்தைச் செயல்வேண்டும். தங்கள் மனைவிகளைக் கணவர்கள் கண்ணே போன்றும், கண்ணிற் கருமணியே போலவும், மணியாடு பாவையைப்போன்று மன்றே காதலித்துக் காத்து வந்தனர்! அழகும் ஆனர்தமும் அமைந்த இல்வாழ்க்கையின் உண்மை இன்பத்தை மக்களிற் சிலரே அறிந்து அனுபவிக்க வல்லார் என்பதை குறள் நன்கு விளக்கும்,

> 'மலரினும் மெல்லிது காமம் சிலரதன்
> செவ்வி தலைப்படுவர்' என்ற

இத்தகை இல்வாழ்க்கையிற் பெறக்கிடைக்கும் பேறுகளில், மக்கட்பேறே மிகச் சிறந்ததாம். எத்துணை நயத்துடனும் திறமையுடனும் உளமகிழ, உடல் புளகிக்க, மனம் நெகிழ, சிறிய, இனிய, அழகிய சொற்களால் மக்கட் பேற்றின் மாண்பை அமைத்துளாரென அறைதலரிதாம். இயம்பரும் இன்பமும், இசைப்பரும் ஓசையும், சொல்லருஞ் சுவையும் பொருந்திய,

> குழலினி தியாழினி தென்பர்தம் மக்கள்
> மழலைச் சொற் கேளா தவர்

என்ற செவ்விய செய்யுளொன்றே சாலும் புதல்வரின் அருமையை விளக்க. பிறகு,

> தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
> முந்தி யிருப்பச் செயல்

என்றதால் தந்தையின் கடமையையும்,

> மகன்றந்தைக் காற்றுமுதவி யிவன்றந்தை
> என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்

என்றதால் மகன் கடமையையும் குறித்துள்ளது கவனிக்கற் பாற்று. பெற்றோரெல்லாம் பிள்ளைகளு மல்லர் என்ற வுண்மையை,

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்

என்ற பாடலின்கண் பண்புற வமைத்துச் சற்புத்திரரைப் பெறலே சிறந்த தென வுய்த்துணரவைத் துள்ளதும் பாராட்டற் குரித்து.

இதன் பின்னர் விருந்தோம்பலைப் பற்றிப் பொய்யாமொழிப்புலவர் புகல்கின்றனர். விருந்தோம்பற் பொருட்டே இல்வாழ்வது. கிரகஸ்தன் பாடுபட்டுத் தேடும் பொருள் முற்றும் வறுமையாளர்க்குத் தந்துதவும் பொருட்டு. நம் பசியை யடக்கிப் பொறுத்துக்கொள்ளுந் திறத்திலும் பிறர் பசியை யகற்றும் ஆற்றலே சாலச் சிறந்தது. விருந்தினரை நகை முகங் காட்டி நல்வரவேற்று இன்மொழி பகன்று உபசரித்தலே இல்லறத்தான் தலைமையான கடன். அன்றியும் விருந்தோம்பல் அவனுக்கே உரிய அரும் சுதந்தரமாகின்றது. விருந்தினர் பால் எங்ஙனம் நடந்து கொள்ளல் வேண்டுமென்பதை தெய்வப் புலவர்,

மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து

என்ற குறளால் வெகு நயம்பட நவின்றுளது மெச்சற் பாலது. செல்வமும் அன்பினால் வரையாது வழங்கும் உதார குணமும் செவிலித்தாயும் குழவியும்போல் அவ்வளவு நெருங்கிய தொடர்பு வாய்ந்தன என்ற கருத்தை,

அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு

என அழகுறக் கூறியுள்ளார்.

மற்றும், இல்லறத்தான், துறவி, அரசன், குடி, எவராயினும் அறத்தைச் சிரமேற்றாங்கி ஆற்றலே அவர் கடன். நற்குணத்தை நாடி நல்லணியாய்ப் பூணலே பெரிது. ஒழுக்கமே மானிடர்க்கு விழுப்பந் தருவது; ஆதலின் அஃது உயிரினும் ஓம்பப் படுவது. வாய்மையே வாய்க்கு அமைந்தது. மனத்துக்கண் மாசில னாதலே மாண்புடைத்து. கொல்லாமையினும் விரதம் குவலயத்தில் வேறில்லை. தன்னெஞ்சறிவதைப் பொய்த்தலின் இழிகுண மின்று. 'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டு; உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு' இம்மாதிரி இன்னம் இங்கு எழுதவும் விளக்கவும் இயலாத அத்துணைப் பெரிய அரிய அறங்களை விளங்கவைத்து, தோட்டி முதல் தொண்டமான்வரை யாவர் வாழ்க்கைக்கும், தொழிலிற்கும், பொருந்திய தருமங்களில் நமது செந்நாப் போதாரால் கூறப்படாத தொன்றில்லை.

மேற்சொன்ன அறங்கள் அனைத்தையும் ஆற்றற்கு அருந்துணையும் பெருங் கருவியும் ஆவது அன்பு. அன்பின்றேல் ஒன்றுமாவதில்லை. அன்பிலா வாழ்க்கை அவலமாய் விடும்.

அன்பகத்தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற் கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று

என்பதும்,

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை யறம்

என்பதும் வாழ்க்கைக்கும் அதன் பயனை யெய்தற்கும் அன்பு எவ்வளவு அவசிய மென்பதைத் தெரிவித்து நிற்கின்றன.

அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையார்
என்புமுரியர் பிறர்க்கு

என்ற அற்புதச் செய்யுளில் அன்புடையார்க்கும் அன்பிலார்க்கு முள்ள பேதத்தை யாவரும் வியப்புற விளக்கியிருத்தலைக் காண்க. இவ்வன்பே பிறரிழைத்த துன்பத்தைப் பொறுக்கவும், துன்பமிழைத்தாரை மன்னிக்கவும், அவர் நாண அவர்க்கு நன்னயஞ் செய்யவும் காரணமாய் அமைந்தது. மேலும்,

அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்த றலை

என்றபடி புவிப் பொறையை வகிக்கவும்,

இன்னா செய்தார்க்கு மினியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு

என்றபடி பகைவர்மாட்டும் என்றும் நல்லதே செய்யும் சான்றாண்மையைக் கைக்கொள்ளவும் அளவில் அன்பன்றே காரணம். மேலும்,

வலியார்முற் றன்னை நினைக்கத்தான் றன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து

என்றதை எப்பொழுதும் ஒவ்வொருவரும் மனத்தகத்து இருத்தி நடப்பின் இவ்வுலகு உயரிய நிலையையும், உன்னதவாழ்வையும், அரிய அமைதியையும், இன்பத்தையும் படைத்து இலங்கு மென்பதிற் சந்தேகம் எட்டுணையு முண்டேயோ? உண்மைப் பெருமை யுடையார் என்றும் பணிந்தே நடப்பர்; சிறுமை படைத்தாரே தம்மைப் புகழ்ந்து செருக்கித் திரிவர்.

எந்நிலையில் நின்றார்க்கும் எத்தொழிலைப் பூண்டார்க்கும், ஊக்கம், விடா முயற்சி, தன் நம்பிக்கை, உடலுழைத்து உண்டல் ஆகிய இவை இணையில்லாக் குணங்களாம். நெற்றி வியர்வை சொட்டப் பாடுபட்டு ஈட்டிய பொருள் கொண்டு குடிக்கும் கூழ் அமரர் அருந்தும் அவ்வமிழ்தினும் இனிது. முயற்சியுடையார் என்றும் இகழ்ச்சி யடையார். கடவுளை நம்பி நங்கடமைதனைச் செய்யின் நாம் கருதாத பலன்கள் கிட்டும். முயற்சியின்றி உறங்கிக்கிடந்து, பொருளில்லே மென்று சொல்லித்திரியும் மாந்தரைக்கண்டு பூதேவி நகைக்கின்றாள் என்ற கருத்தமைத்து,

இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்
நில மென்னு நல்லா ணகும்.

என்றபாடலைப் பயந்தருளிய பெரியாரின் பெருமையை என்னென்பது? நன்மையைக் கடைப்பிடித்து ஓயாது ஒழியாது பாடுபட்டு வருபவர் விதியை யும் வெல்ல வல்லுநர் என்ற கருத்துடன்,

ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துளுற்று பவர்

என்ற அரும்வாக்கை மலர்ந்தருளியதை மனத்தில் மறவாது வைத்தல் மிக நன்று. அடுக்கடுக்காய் இடுக்கண்வரினும் அஞ்சாது அசையாது அவரவர் அறந்தன்னை ஆற்றலே ஆண்மையாம். அகிலத்துதித்த அனைவரும் அல்லல் களுக்கு ஆளாகி அலைந்து வாடல் இயற்கையே யென்ற பேருண்மையை யுணர்ந்து அகங்குன்றாது இருத்தலே சிறந்தது என்று மாந்தர்க்குப் புகட்டும் கருணையுடன் நமது திருவள்ளுவ நாயனர்,

இடுக்கண் வருங்கா னகுக வதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்

என்று மனோதிடத்தை யளிக்கும் மொழியைத் தந்தனர். இவ்விடத்து மக் களிற் சிறந்தாரின் குணத்தையும், கீழ்மக்களின் குறிகளையும் நினைவிற்குக் கொண்டு வாராமல் விடுவதற்கு மனமில்லை. அவை,

நாணுமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணுமை பேதை தொழில்

என்பதும்,

அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு

என்பதுமே.

ஈண்டு புலவர்களிற் சிறந்த நமது நாயனர் தம் நூலின் பெருமை முற் றும் இச் சிறு கட்டுரையின்கண் எடுத்துக் காட்டல் மிகவரிது. தன்னரிய பெருநீதித் தனியாறு புகமண்டும் பள்ளமெனத்தகைய அவர்தம் அரிய அழ கிய உயரிய நூலின்கண் சொல்லி யிருப்பன முற்றும் முக்காலத்தும், எக் காலத்தும், எச்சமயத்தார்க்கும் சம்மதமாயிருப்பன என்பதை நன்கு கவனிக் கத்தக்கது. இஃது இத்தரணி உள்ளளவும் நிலவி நின்று நவிலரும் நன்மை பயந்து மன்பதையரை உய்யச்செய்யு மென்பதிற் சிறிதளவும் ஐயப்பாடின்று. சுபம்.

---

மனைவி:—"நீங்கள் ஒருபெரிய மந்த ஜென்மம்."
புருஷன்:—"நீ சொல்வது விளங்கவில்லையே."
மனைவி:—"இதே தான்."

# திருநாவுக்கரசு சுவாமிகள் மாட்சி

—:(o):—

ஒரு தமிழாசிரியர்.

மாசில் வீணையும் என்ற பாடலைப்பாடி இன்புற்றிருந்தனர். பின்னர் ஏழுநாட்கள் கழிந்த பின் அனைவோர்க்கும் தெய்வம் இலைமுகப் பைம்பூணிறை யென்னும் வாக்கியத்தைக் கடைப்பிடித்து நடக்கப்பட்டவர்களைப் போல சமணர்கள் அரசன் கட்டளையின்படி நீற்றறைக் கதவைத் திறந்தார்கள். திறந்ததும் நீற்றறையிலுள்ள திருநாவுக்கரசு சுவாமிகள் ஒரு துன்பமுமின்றி விளங்கிக்கொண்டிருந்தார். அதைக்கண்ட அவர்கள் ஆச்சரியமுற்று மன்னன்பாற் சென்று தருமசேனர் நமது சாஸ்திரங்களையுணர்ந்தவ ராதலால் பிழைத்தா ரென்றார்கள். அச்சொற்கேட்ட கொடுங்கோலரசன் இவனை இனி யென்செய்யலாங் கூறுக வென்றான். சமணர்கள் நஞ்சூட்டவேண்டு மென்றார்கள்.

கொல்லாமையே மேற்கொண் டொழுகுவானது வாழ்நாள் மேலுயிருண்ணுங் கூற்றுஞ் செல்லாதென்னும் முதுமறைப் பொருளை யறியாதா ராகிய சமணர்கள் உற்று நோக்கி இவனுக்கு விடமும் அமுதாயிற்று. இவன் இன்னும் உயிர்பெற் றிருப்பானாயின் நமக்குத் தீங்கு விளைவிப்பானென்று கருதிக் கொல்லுஞ் சூழ்ச்சிகளை யோசித்தார்கள். உடனே அவர்கள் அரசன்பாற் சென்று நாங்கள் வாழவும் நம் அரசாட்சி நிலை பெறவும் தருமசேனனைத் தாமதியாது கொலைபுரிய வேண்டு மென்றார்கள். அதுகேட்ட அரசன் அதற்கு வேண்டிய தந்திரம் கூறுவீர்க ளென்றான். சமணரும் உமது பட்டத்து யானையை விடுத்துக் கொலைபுரிய வேண்டு மென்றார்கள். அவ்வாறே அரசன் யானையைச் சுவாமிகளுக்கு முன்னர் விடுத்தான். உடனே கோபங்கொண்டு கொலை புரிவதற்கு வந்த யானையைக் கண்ட நாயனார் சிறிதும் அஞ்சாது ஆபத்து நேர்ந்தவிடத்தில் உயிருக்கு ஒப்பற்ற துணையாயிருக்கும் சிவபெருமான் திருவடித் தாமரையைச் சிந்தித்து,

"சுண்ணவெண் சந்தனச் சாந்தும்" என்னும் திருப்பதிகத்தை யெடுத்து ஒவ்வொரு பாட்டினிறுதியிலும் அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்ச வருவதுமில்லை யென்று திருவாய் மலர்ந்தருளினார்.

> "திரமாயுன்ற னடிப்போதிற் செலுத்துமனத்தை யுடையார்கள்
> பரமானந்த சுகம்பெறுவா மென்னும்பரிசு தனை யுணர்ந்தே
> உரமார் நாவுக்கரசெனும் பேருடையாயுனையே வந்தடைந்தார்
> வரமார் மாலோடயன் றுதிக்கும் மணியே யெனக்குமருளாயே"

பொன்னுலியன்ற பட்டத்தை யுடைய புகாணிந்த மத்தகத்தினையும் அணுகுதற்கரிய வலிமையினையும், மணநாறும் மதத்தினையுமுடைய அந்த யானை திருநாவுக்கரசு சுவாமிகளை வலம்வந்து வணங்கிப் பயந்து அப்புறம் போயிற்று. உடனே அதன் மேலிருந்த பாகர்கள் அவ்யானையை அங்குசத்தால் குத்தித் திருப்பிச் சுவாமிகளை மாய்க்கவேண்டிய குறிப்பைக் காட்ட அது அவர்களைக் கீழே தள்ளிக்கொன்றும் பற்பல விடங்களிலுமுள்ள சமணர்களை யெல்லாம் தேடித் தேடித் துவைத்துக் கொன்றும், துன்ப

முறுத்தியும் இன்னல் விளைத்தது. அன்றியும் நகரத்தி லுள்ளவர்களுக்கெல்லாம் பயங்கரத்தையு முண்டாக்கிற்று.

அதுகண்ட அரசன் துயரக் கடலி லாழ்ந்தான். இங்ஙனம் வெற்றியமைந்த அரசன் துயரக் கடலில் அமிழ்ந்ததைப் பார்த்துச் சமணர்கள் அரசனை நோக்கி வேந்தே நாங்கள் புகலும் மாற்றங்களை யெல்லாம் ஆதரவோடுங் கேட்டருள வேண்டும். இதுகாறும் தருமசேனர் நமது சமய சாஸ்திரங்களில் கற்ற மந்திரத்தின் வலிமையால் நாம் விடுத்த யானையைக்கொண்டே நமக்கெல்லாம் தீங்குபுரிவித்தான். இன்னமும் இவனால் என்ன தீங்குகள் சம்பவிக்குமோவென்று புலம்பிப் புகன்றார்கள். அதுகேட்ட அரசன் நாம் யாது செய்யலாமென்று கேட்டான். சமணர்கள் அவனைக் கல்லோடு கயிற்றாற்கட்டிப் படகி லேற்றிக் கடலிலே தள்ளவேண்டு மென்றார்கள். உடனே உண்மை யறியாத வரசன் அங்கிருந்த கொலைத் தொழிலாளரைக் கூவி இவர்கள் சொல்லியபடிச் செய்யுங்களென்று கட்டளையிட்டான். அவர்கள் அப்படியே செய்தார்கள். அவ்வமயம் எல்லாம்வல்ல இறைவனைத் தம்மிருதயத்திலே யிருத்திய திருநாவுக்கரசு சுவாமிகள் எப்பரிசாயினும் ஆகுக. நான் தந்தையையேத்துவனென்று 'சொற்றுணை வேதியன்'' என்னும் நமச்சிவாயப் பதிகம் பாடினார். உடனே கடலின்மீது கல்லானது சுவாமிகள் மேற்பக்கத்திலிருக்கத் தெப்பம்போல் மிதந்தது. பிணித்த பாசமும் அறுந்தது. தவஞ்செய்த வருணனும் கருங்கல்லே சிவிகையாகத் தமிழ்த் தெய்வத்தைத் தாங்கிக்கொண்டு திருப்பாதிரிப்புலியூ ரென்னும் திருப்பதியினருகே சேர்ந்தனன். சுவாமிகள் திருக்கோயிலுக்குச் சென்று ஈன்றாளுமா யென்னும் தமிழ்ப்பாமாலை சாற்றிச் சின்னாள் அங்கு அருந்தமிழ்ப் பதிகம் பாடிக்கொண் டிருந்தார். அருக சமயமென்னுங் கடலைக் கடந்தேறிய திருநாவுக்கரசர் திருவதிகை வீரட்டானேசுவரரைச் சேவிக்கவேண்டு மென்னும் பெருங்காதலினால் திருப்பாதிரிப்புலியூரை விடுத்துச் சென்று, திருமாணிக் குழியினையும், திருத்தினை நகரையும் கண்டு தொழுது, திருவதிகையைச் சார்ந்தார். அப்பதியிலுள்ள அடியவர்கள் நகரை யலங்கரித்து எதிர்கொண்டு பணிய அவர்களோடு திருக்கோயிலுக்குச் சென்று பெருமானாரை வணங்கி "வெறி விரவு கூவினர்" என்னும் ஏழைத் திருத்தாண்டகத்தை யோதியும், சிவபெருமா னெழுந்தருளிய பலதிருப்பதிகளைப் பாடியும், சிவபெருமானுக்குத் திருத்தொண்டு செய்துகொண்டு மிருந்தார். சமணர்களோடு சேர்ந்து வாய்மையைத் தெரிந்து கொள்ளாமல் பற்பல தீங்குக ளிழைத்த பல்லவ ராஜன் திருநாவுக்கரசு சுவாமிகளை வணங்கிச் சைவனாகிப் பாடலிபுரத்தி லிருந்த சமணர் பள்ளிகளையும், பாழிகளையுமிடித்து, அவைகளின் கற்களால் திருவதிகையிலே குணதர வீச்சர மென்னும் திருவாலயத்தைக் கட்டினான்.

இவை நிற்க கடவுளை யுள்ளே காண வேணுமென்றும், புறம்பே காணவேணுமென்றும் நீ விசாரித்த விடத்து, உன்னுடைய போதத்தையும் சரீரத்தையும் முன்போலவே கைவிடாமை கொண்டு இரண்டுபட்டுத் தோன்றின தொழிந்து, அந்தப் பொருளுக்குத் தனித்தனி ஓரிடமிரா தாகையால், பிண்டப் பிரமாண்டங்களையும், தத்துவங்களையும் ஆன்மபோதத்தையும், உருவதரிசன சத்திகளாலே அருளாக்கி யொரு நீர்மையான ஞானமேயாய் உன்னினைவு யொழிய நிற்கில் அப்பொழுதே யுன்னிடத்திலே பரமசிவன் தன்னுடைய காருண்ணிய சத்தியுடனே கைம்மாறு கருதாமல் வந்து தோன்றி யுன்னை யொருதன்மை யாக்கிக்கொண்டு

தானே பிரகாசியா நிற்பன். இதனைச் சிவயோகத்தின் கண்ணே நின்று ஆராய்ந்து அனுபவிக்கின்றேனென்கிற தன்மையையுங் கைவிட்டு நிற்பாய். இந்த முறைமையன்றி, சிவனுடைய உண்மையைக் கேட்குதல், நினைக்குதல் காண்குதல்,செய்த பொழுதே உன்னுடைய கருத்தைத யுருக்குவதான தொரு பேரன்பு கூடுமாயின் அதனாலே உன்னுடைய கருத்தானது, நேராக அழிந்து சிவனுடனே ஒரு நீர்மையாய் விடுவாயென்னும் ஞான யோகங்களையும் பக்தி யோகங்களையும் கைக்கொள்ள வேண்டுமென்னுஞ் சித்தாந்த சாஸ்திரத்தின் காட்டுக்கு மேற்கோளாய்ச் சிவமயமாகவே விளங்கும். திருநாவுக்கரசு சுவாமிகள் சிவத்தல யாத்திரை விரும்பித் திருவெண்ணெய் நல்லூர், திருவா மாத்தூர், திருக் கோவலூர் முதலிய திருப்பதிகளை வணங்கித் தேவாரப் பதிகம் பாடி, திருப்பெண்ணாகட மடைந்து திருத்தூங்கானை மாடமென் னும் ஆலயத்திற்குப்போய்ச் சிவபெருமானைப்பணிந்து எம்பெருமானே அடி யேன் ஆருகத சமயத்தொடக்குண்டு போந்த இவ்வுடலோடு உயிர் வாழத்தரி யேன், உயிர் பெற்றிருப்பதற்குற்குத் தேவரீர் திருமுத்திரையாகிய சூலத்தை யும் இடபத்தையும் என்மீது பொறித்தருளல் வேண்டுமென்று, பொன்னார் திருவடிக்கொன்று விண்ணப்பமென்னும் திருவருட்பதிகம் பாடினார். பாடி னதும் சிவபெருமான் திருவருளால் ஒரு சிவபூதம் ஒருவருக்குந் தெரியாத படிச் சுவாமிகள் திருத்தோளிடத்தே சூலக்குறியையும் இடபக் குறியையும் பொறித்தியது. வாகீசர் பரமசிவனார் திருவருளை வியந்து விழுந்து வணங்கி யெழுந்து, திருமுதுகுன்றம் முதலிய திருத்தலங்களுக்குச் சென்று சிவதரிசனஞ்செய்து கிழக்கே நிவா நதிக்கரை வழியாகக்கடந்து, சிதம்பரத் தலத்தை யடைந்தார். அடைந்ததும் என்று வந்தாயென்னுங் குறிப்போடு திருத்தாண்டவம் புரியும் நடராஜப் பெருமானைப் பணிந்து ஆனந்தமயமாய் நின்று, கருநட்ட கண்டனை யென்னும், திருவிருத்தத்தையும், பத்தனாய்ப் பாடமாட்டேன் என்னும் திருநேரிசையையும், அன்னம் பாலிக்கும் தில்லை யென்னும் திருக்குறுந் தொகையையும், பாடிப்பரவினார். பின்னர் அத்தலத் தினின்றும் திருவேட்களத்துக்குப் போய்ச் சுவாமியைத் தொழுது பதிகம் பாடித் திருக்கழிப்பாலை யென்னும் சிவஸ்தலத்தை யடைந்து சிவதரிசனஞ் செய்து வனபவளவாய் திறந்து என்னும் திருப்பதிகமருளச் சின்னாள் அங்கே தங்கி யிருந்தார். பின்னர் அத்தலத்தை விடுத்து வழியிலே "பனைக்கை மும்மத வேழ முரித்தவன் என்னும் திருக்குறுந் தொகையை யருளிச் செய்து கொண்டே தில்லையம்பதியைச் சேர்ந்து அரியானை யென்னும் பெரிய திருத்தாண்டகத்தைப் பாடிக்கொண்டு திருவம்பலமேவி சுவாமி யைத் தரிசித்துத் தொழுது" "செஞ்சடைக்கற்றை" யென்னுந் திருநேரி சைப் பாடினார்.

வாகீசப் பெருந்தகையார், சிதம்பரத்திலே திருத்தொண்டுகள் செய்து கொண்டிருந்த நாளில் ஒருநாள் அவர் சீகாழியிலே அம்மையார் ஞானமிர்தத் தை யுண்ட திருஞானசம்பந்த மூர்த்திச் சுவாமிகளது தெய்வீகச் செயல்களை அடியார்கள் சொல்லக்கேட்டு அத்திருவாளர் சேவடிகளை வணங்க வேண்டு மென்னும் பேராசையால் ஸ்ரீநடராஜப் பெருமானைத் தொழுது விடை பெற் றுத் திருவீதியிலேயே புரண்டு அங்கப் பிரதட்சணஞ்செய்து அத்திருவெல்லை யை வணங்கிக் கடந்து, திருநாரையூரைப் பணிந்து பாடிச் சீகாழி யருகே வந்தார். வாகீசர் வருதலைக் கேள்வியுற்ற திருஞானசம்பந்த சுவாமிகள் அடி யார்களோடு அவரை யெதிர் கொண்டார். திருநாவுக்கரசு சுவாமிகள் ஞான

சம்பந்தப் பெருமானாரது திருவடிகளை வணங்கினார். கௌணியர் பெருமான் அவரது திருக்கரங்களைப்பற்றி யெடுத்து வணங்கி, அப்பரே யென்ன அருளரசர் அடியேன் என்றார்கள். அவர்களிருவரும் எல்லையில்லா ஆனந்த மெய்தி யாலயத்திற்குப் போய் அம்பிகா பதியை வணங்கினார்கள். அது காலை ஆளுடைய பிள்ளையார் அப்பர் சுவாமிகளை நோக்கி யுமது தம்பிரானைப் பாடுமென்ன ஆளுடைய வரசர் "பார்கொண்டு மூடி" என்னும் திருப் பதிகத்தை யருளி திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் திருமடத்திலே யெழுந்தருளி அப்பிள்ளையாருடன் பலநாளிருந்தார்.

இங்ஙனம் வாகீசர் திருஞான சம்பந்த சுவாமிகள் மடத்தில் இருந்து வருகின்ற காலத்தில் சோழநாட்டிலுள்ள தலங்களை யெல்லாம் வணங்குதற்குக் காதல்கொண்டு பரசமயக் கோளரியாரோடும் திருக்கோலக்காவிற்குப் போய்ச் சிவபெருமானை வணங்கித் துதித்தார். பரசமயக் கோளரியார் சீகாழிக்குத் திரும்பினார். அப்பர் சுவாமிகள் திருக்கருப்பறியலூர், திருப்புன்கூர், திருநீடூர், திருக்குறுக்கை, திருநின்றியூர், திருநனிபள்ளி,திருச்செம்பொன் பள்ளி, திருமயிலாடுதுறை, திருத்துருத்தி, திருவேள்விக்குடி, திருவெதிர்கொள்பாடி, திருக்கோடிக்கா, திருவாவடுதுறை, திருவிடைமருதூர, திருநாகேச்சுரம், முதலிய சிவத்தலங்களைத் தரிசித்துப் பதிகம்பாடி, திருச்சத்தி முற்றத்தை அடைந்து, சுவாமி தரிசனஞ்செய்து முடுகியவென்னும் திருப்பதிகத்தைத் கோவாய் திருவாய் மலர்ந்தருளினார். அப்பொழுது சிவபெருமான் நல்லூருக்கு வாவென்று திருவாய் மலர்ந்தருளினார். சிவபெருமான் கட்டளையின்படித் திருநாவுக்கரசு சுவாமிகள் திருநல்லூரையடைந்து சுவாமியை வணங்கி மகிழ்ந்தெழுகின்ற வமயத்தில் சிவபெருமான் உன்னுடைய எண்ணத்தை நிறைவேற்றுகின்றோமென்று தமது திருவடித்தாமரைகளை அவர் திருமுடியின்மீது சூட்டியருளினார். சுவாமிகள் உடனே "நினைந் துருகுமடியாரை நையவைத்தார்' என்னும்' திருத்தாண்டகம் பாடினார். இன்னும் பற்பல திருப்பதிகங்களையும் அருளிச்செய்துகொண்டே திருக்கருகாவூர், திருவாவூர், திருப்பாலை முதலிய க்ஷேத்திரங்களுக்குப்போய்ச் சுவாமி தரிசனஞ் செயதுகொண்டும் நல்லூரிலேயே சிலநாளிருந்தார்.

திருவளர்தாமரை சீர்வளர் செங்கழுநீர் கொணெய்தல்
குருவமர் கோங்கங்குராமகிழ் செண்பகங் கொன்றைவன்னி
மருவமர் நீள்கொடி மாடமலி மறையோர்க ணல்லூர்
உருவமர்பாகத் துமையவள் பாகனை யுள்குதுமே.
செல்லேர் கொடியன் சிவன் பெருங்கோயில் சிவபுரமும்
வல்லேன் புகவுமதில் சூழிலங்கையர் காவலனைக்
கல்லார் முடியொடு தோளிறச் செற்ற கழலடியான்
நல்லூரிருந்த பிரானல்லனோ நம்மையாள்பவனே.

திருச்சிற்றம்பலம்.

---

# அன்னை வழிபாடு

(K. சம்பந்தம் பிள்ளை, B.A., L.T.)

'சதுமறை யாரியம் வருமுன் சகமுழுது நினதாயின்
முதுமொழிநீ யநாதியென மொழிகுவதும் வியப்பாமே'

என்ற செங்கருத்தினைச் செவ்விதின் விடுத்தவர் 'கொடுமலையாளக் குடியிருப்'பாளரும் தண்டமிழ்ப் பணியினைத் தலைதாங்கி நின்றவருமான சுந்தரப் பெரியாரென்பது நம்மனோர் அறிந்ததே. முதுமொழியே யெனினும், தமிழ்மொழி சில மொழிகளை போன்று உலக வழக்கொழிந்து சிதையாத் திறத்தால் தன்னைச் சார்ந்துள மக்கட்கு, அன்னார் இளையரேனும் முதியரேனும் செல்வரேனும் வறியரேனும், அவரது உடலோம்பல் வினைகட்கும் உயிரோம்பல் வினைகட்கும் உற்ற துணையாய் நிற்றலால், தமிழ்மக்கள் தம்மைப் பத்துத் திங்களாய்ப் பரிவுடன் சுமந்து நலிவுடனீன்ற நற்றாய்பாற் பாராட்டுமன்பு அவரது செவிலித் தாயாகும் தமிழ்ப் பேரணங்கிற்கு முரித்தாவது இயல்பின் வழியதன்றோ? அவ்வன்பினூடு பிறக்கு மன்னை வழிபாடு செவிலித் தாய்க்கு மியையுமன்றோ?

கால வரைப்படாத பேராயுள் படைத்த இவ்வன்னையார் பண்டை நாட்களிற் றனிநிலை யோச்சியதும், பிற்காலத்திற் பிறமொழி மாயையிற் சிக்குண்ட தம்மக்கள் தம்மை மெய்யன்புடன் பேணா தொழியவே என்பளவாய் நலிவுற்றதும், சில்லாண்டுகளாய் முறை பிறழ்ந்த வழிபாட்டை முறையினுற்ற முந்துற்றோ ரொருசிலரி னுண்மை யூக்கத்தால் தன்னலிவி லொருசிறிது நீக்கி நலனடைந்து வருவதும் நம்மனத் திருத்தற்குரிய கருத்துக்களாம்.

அயர்ந்து வீழ்ந்த அன்னையார் அயர்வு துறந்துள்ள ரென்பதுண்மை. எனினும் அயர்வு துறந்தவர் அடியூன்றி நிற்கவும் தன்னியற்கைப் பொலிவைப் பெற்று பண்டைப் புகழைப் பூணவும் வேண்டாமா? அந்நன்னிலை நண்ணுதல் சிறு தொகுதியினர் முயற்சி யளவி லமைந்துவிடுமா? தமிழகத்தின் பகுதிதோறும், பட்டினந்தோறும், ஊர்தோறும், மனைதோறும் வாழும் ஆண்மக்களும் பெண்மக்களும் அன்னையார்க்குச் சிறப்பொடு பூசனை புரிந்தாலன்றி அவ்வுயர் நிலை கிட்டுவது யாங்ஙனம்? இச்சீரிய தொண்டு சிறந்தஞான்றே தமிழகமுந் தமிழ்மக்களுந் தனிநிலை தழுவ வியலும்.

## ஓதல்.

இனி வழிபாட்டின் வகையினை ஒருவாறு ஆயுங்காலை அது பலதிறத்ததாகுமெனினுஞ் சில கூறுகளைக் குறித்து நோக்குவோம். இக்கூறுகளில்

தலைநிற்பது நூல் ஓதலாகும். நூல் ஓதலில் ஓதுவார் ஆர்வம் ஊன்றப்பெற்ற உள்ளத்தராதல்வேண்டும். ஆர்வமூண்ட வுள்ளமே அறிவுடன் உணர்ச்சியை யும் பற்றச்செய்யும். அறிவுணர்ச்சியின் அளவே ஆசில் வாழ்க்கை அமையும். பிறமொழி நூல்களை ஆசையுடனும் ஊக்கத்துடனும் ஆய்ந்து அம்மொழிகளை வழங்கும் பிறநாட்டாரின் அறிவுணர்ச்சியினைச் சீருஞ் சிறப்புமுற அறிதல் எளிதே. ஆயினும் அப்பிறநாட்டு அறிவுணர்ச்சி தனித்துநின்று வாழ்க்கை ஒழுக்க நிலையினை ஓம்பும் உயர்வலி யுடையது என்று உரைக்கலாகுமா? நாட்டறிவுணர்ச்சியினைக் காலவியல்பினுக் கேற்ப, பயனில்லனவாய பழயன பேர்த்து, பயனுடையனவாய புதியன புகுத்தி, அதற்குப் புத்துயிரளிப்ப தொன்றே அப்பிறநாட் டறிவுணர்ச்சிக் கியன்ற தொழிலாகும். எனவே, ஒழுக்க நிலைக்கு அடிப்படையாவது நாட்டறிவுணர்ச்சி என்பது வெள்ளிடை மலை யன்றோ? நாட்டுமொழி நூல்களே இவ்வறி வுணர்ச்சியினுக்குக் குன்றாக் களஞ்சியமாகலின், அந்நூல்களை நன்றே ஓதல் கற்றுறையாகும்.

ஓதற்றுறை யேற்பார் கற்றற்குரிய காலம், மனநிலை முதலாய துணைவலி களமையப் பெற்ற இளமையேயாகும். தற்காலக் கல்வி முறையில் இந்நிலை யார் பல்வேறு அறிவுப் பகுதிகளைக் கற்றுணரக் கடமைப்பட்டவரே; எனி னும், அப்பகுதிகட்கு மூலாதாரமாகும் தாய்மொழித் தேர்ச்சி தம்பாற் சிறக்கச் செய்தலே சீரிய முறையாகும். தவிரவும் மாணவநிலை முடிவுற்ற பிறகும் இத்திறத்தார்க்கு அன்னைபா லன்புதழைத்தற்கு இம்முறை அரிய வித்தாகு மன்றோ?

ஓதற்றுறை பின்னைப் பருவத்தினர்க்கே பெரும்பாலும் பொருத்த முடைத்தாயினும் "கல்வி கரையில" தென்னும் மூதுரை மெய்வழிப்பட்ட தெனின், கற்றோரென்று கருதுங் காளையரும் பிற்பருவத்தினரும் ஓதல் தொழிலைக் கைநெகிழவிடாது பேணிநிற்றல் பெருமைத்து.

### ஓதுவித்தல்.

ஓதல் வழிபாட்டை ஓம்பி நிற்போர்—சிறப்பாய்ச் சிறுமக்கள்—தம் மிலக்கினை ஈடேற்றற்கு, அறிவாற்றலில் தம்மினும் மிக்கராது துணையைக் கொண்டுள்ளனர். அத்தகைய துணைக்குரியோர் தாயும், தந்தையும், ஆசா னும், ஆக்கியோனும் ஆகிய நால்குரவருமே யாவர். இந்நால்வரில் நாலாங் குரவராகுங் கடவுளர் முத்தொழிற் பெரியாரன்றோ? ஆனதுபற்றி அன்னா ரது அருட்டுணை யின்றி எக்கருமமும் எற்புடைத்தாகா தென்பதை எவரும் உணர்வர். எஞ்சிய மூவரில் ஆசானே மாணவர்க்குத் துணைநிற்கத் தகுந்தவ னென்றும், மக்கள் தம்மிலக்கு ஈடேறப் பெறாதொழிவரேல், அன்னாரின் இழிநிலை, ஆசான் அறம் வழுவியதானே விளைந்ததென்றும் மொழிவர். மக் களைப் பெற்றோர் மாணவர்க்கு முழுத்துணையு முதவ கல்வி முறையுங் காலக் குறைவுந் தமது முயற்சிகட்கு முரணுவதை யுன்னாது தந்தலைமேற் பழிசுமத்

தல் ஆடாது என்று அறைவர் ஆசிரியர். இவ்விரு திறத்தார் கடமையினையுங் காலநேர்மையையுஞ் சீர்தூக்கி, ஒவ்வொருவர் கூற்றும் ஒரேவழி யுண்மையா யினும், துணை வழங்குதற்கு இருபாலரும் உரித்தானவரே என்று சாற்றுவர் ஒரு சாரார். ஓதுவிக்கும் பணிதாங்குவோர் ஆசிரியரே எனினும், ஓது வித்தலுந் தொண்டு முறைகளில் ஒன்றும் என்னுங் கருத்தையும், நாட்டறி வுணர்ச்சியை வாழ்க்கையி லிணைத்து மக்களைப் பயிற்றுவிக்குங் கடன் பெரும்பாலுந் தமதேயாகு மென்னுங் கருத்தையுந் தம்மனத்திருத்தி, மக் களின் முன்னேற்றத்திற்கு ஆசிரியருடன் ஒத்துழைக்கத் தாய் தந்தையரும் உடன்படக் கடவரென்பது மேற்கூறிய நடுநிலைத் தீர்ப்பாளரது துணிபு போலும். உற்று நோக்கின் இத்துணிபு போற்றற் பாலதே எனப் புலப்படும்.

ஓதுவிக்குந் தொண்டினுக் கிசைந்துள்ள ஆசிரியர் தொண்டின் சீர் மையை நன்றாக ஓர்ந்து ஓதுவார்க்கு ஏனைய அறிவுப் பகுதிகளைப் புகட்ட மேற்கொள்ளும் தேர்ந்த முறைகளானே தமிழன்னை பாலுந்தூய அன்பு தோன்றச் செய்தல் வேண்டும். போதிய அறிவின்மையானோ, உணர் வின்மையானோ அல்லது இரண்டு மின்மையானோ இளம் மக்கட்குத் தமி ழோதுவிக்குந் தொண்டேற்றோர் தந்தொண்டி லூக்கங் குன்றியவராகக் காண்கின்றனர். வகுப்பேற்றத்திற் குதவுவதோடு தங்கடமை முற்றுப் பெறுவதாகு மென்ற கருத்தைக் கொண்டோ, 'எவ்வகுப்பினு மெளிய நடையே வேண்டு' மென்றும், 'செந்தமிழ்நடை மொழிச் சிறப்பிகட்கே சிறந்த தாகலின் மாணவப் பொதுமக்கட் குதவுவதன்று' என்றும் பறை சாற்றித் திரியும் 'முறை' படைவீரர் சிலரின் சீற்றத்திற் கடங்கியோ, அன்றி மாணவரின் மனத்திடத்தை யறிய இயலாமையாலோ, இவ்வாசிரியத் தொகுதியினர் தம்மை அண்டிய மாணவர்க்கு அளிக்கும் மொழித் தேர்ச்சி சுவையற்று ஊறுதியற்று மிருக்கின்றது. சோறுண்ணத் தலைப்பட்ட காலை யும் மக்கட்குக் கஞ்சியே வார்த்தல் அன்னார் மெய்வளர்ச்சிக்கும் வலுவிற்கு மேற்றதாமோ? என்னே அறிவின் புன்மை! உடலாக்கத்திற்கும் மனவாக் கத்திற்கு மதனதன் வளர்ச்சி நிலைக்குரிய உரமூட்ட லன்றோ தகைமைத் தாகும். நிற்க, மேற்றர வகுப்புகட் காசிரியராகும் 'புலவர்' விருது பெற்ற பேரறிஞர் சிலரிடத்தும் இக்குறை காணப்படுவதேன்? தம்மறிவு தமக்கே உரித் தென்ற எண்ணத்தானோ? முயற்சி வருவாயளவில் அடங்குவது என்ற சித்தாந்தம் பற்றியோ? 'எம்முயற்சி யெடுத்தும் இம்மக்கள் பாற் பயனிறுத்தல் கூடாக்காரியமா' மென்று ஏழை மாணவரை எள்ளிச் சீறும் சில ஆசிரியரின் இலக்கினுக் கியைந்தோ? இன்றி இளமையினே ஏற்ற பயிற்சி அளிக்கப்படாமைக்கு நாமென்ன செய்வோம் என்ற கூற்றைக் கொண்டோ? எதுவாயினும், இவர்களிடத்துப் பயிலுவோர் ஆண்டிச் சோதனை விழாவில் அரங்கேற்றற்குரிய அறிவு பெறுவதுண்மை யாயினும்

இவர்களில் அன்னையார்க்கு மெய்த் தொண்டராவோர் சிலரினுஞ் சிலரே. இங்ஙனம் நிகழ்வதேன்?

உணர்ச்சி வழிப்படா அறிவு பயன்படாது. அறிவினை உணர்ச்சி யூடிணைக்க வேண்டியதற்கு வேண்டிய வலிவு ஆசிரியரானே ஆக்கப் படல் வேண்டும். அவ்வலிவும் ஆசிரியர் மேற்கொள்ளும் உணர்ச்சியையே தனக்குப் பிறப்பிடமாய்க் கொண்டுளது. ஆகவே ஓதுவித்தல் தொண்டை நல்லாற்றின் ஒழுக்க உறுதிகொள்ளும் ஆசிரியர் மொழியறிவினுக்கு—அதிலும் நாட்டு மொழியறிவினுக்குரிய உணர்ச்சியை தொண்டினுக் கேற்றவாறு அமைத்துக் கொள்ளுதல் அன்னார்க்குத் திணைக்கரமா மன்றோ?

நூலாக்கல்.

ஓத லோதுவித்தலாய இருவகை வழிபாட்டிற்குங் கருவியாவது நூல். இயற்றப்படுங் கருமத்தின் பெருமை கருவியின் தன்மையையுந் தழுவி நிற்றலால், நமது கருவி கருமத்திற்கொத்த பண்பு வாய்ந்திருத்தல் வேண்டும் அல்லவா? ஆகவே அத்தகைய பண்பு அமைய கருவியை யாக்கலும் வழிபாட்டின் பிறிதொரு துறையாம் அன்றோ? இத்துறையின் நீர்மை யாது?

அறம், பொருள், இன்பம், வீடு என்ற நாற்பயன் அளிக்க வன்மையுடைய நூலே இலக்கண முறையில் ஆக்கப்பட்ட நூலாகு மெனினும், அம்மெய்ந் நூலை ஓதி உணர்தற்கு உறுதுணையாகுந் தற்காலப் பாட புத்தகங்களையும் 'நூற்றொகுதி' என்ற பேரினத்திற் சேர்த்தல் பிழைபடாது.

நூலாக்குவோரும் தமது முயற்சி தொண்டுவயப்பட்ட தென்ற எண்ணத்தைத் தமதுள்ளத் திருத்தல் அன்னார் தலைக்கடன். இக்கடனை யுணர்ந்தோர், வணிகமுறை யொன்றினையே பேணி, புற்றீசல் போன்ற நூற்றுக் கணக்கான நூல்களை அச்சூர்திமே லேற்றிவிடார். தமிழகத்திலே தமிழ்த் தாய் தகப்பன்பாற் பிறந்த தமிழ்ச்சிறுவர் தமிழொலிகளினு மெழுத்துக்களினும் பயிற்சியடையு முன்னரே பிறமொழி ஒலிகளையு மெழுத்துக்களையுங் கற்கலாமென்று துணியார். தமிழிலக்கணத்திற்கு முரண்பட வமைந்த சொற்களைப் புத்தகத்தின் முற்பாடங்களிலேயே சேர்க்க வொருப்படார். பண்டைத் தமிழகப் பெரியார் சரிதைகளைப் புறக்கணியார். தமிழ்மக்களை, அன்னார் எக்காலத்தவராயினும், தாழ்த்திக்கூற மனமொவ்வார். சிறு மக்கட்கு நாட்டறி வுணர்ச்சி யளிக்குமுன் பிறமக்க ளறிவுணர்ச்சியினைப் புகட்ட விழையார். நாட்டறிவுணர்ச்சியினையும் அவர்களது புலன் வழிப்படுத்தி மனத்தின்கட் செறியச்செய்து நாட்டி னியல்பினுக்குற்ற நல் வாழ்வின் மேவ உதவுவர்.

நூலாக்குவார் தம்மனத் தாராயக்கூடிய மற்றொரு கருத்தாவது, தமது நூலகத்துப் பிறமொழிகளி லியங்குஞ் சொற்களை யெடுத்தாளலே. தமிழ் 'பிறிதுமொழி விழையாமல் தன்னாற்றலே ஆற்றலாக நடந்தேற வல்ல' தென்

றும் பிறமொழிச் சொற்களை ஏற்றுவித்தல் தாம் நோற்கும் நோன்பினுக்கு முரண்படுவதாகு மென்றும், ஏனை வடதிசைச் சொற்களை வடிவற வகற்றித் தூய தமிழ் மொழியினை நூலாக்கி விடுத்தல் நூலாசிரியரின் மாணொழுக்கமா மென்றும் உறுதி கூறுவர் அன்னை யடியாரிலே ரினத்தார். இத்துணிபுக்கு மாறாக கால வியற்கைக்கேற்ப தமிழ்மொழி வளர்ச்சியுற வேண்டுமாயின் இம் மொழி தனக்குரிய சொற்களோ டமைந்து விடாது வடதிசை மொழிக ளுடனு முறவு கொண்டு அவைகட்குரிய சொற்களைத் தம்மால் வரைவின்றி விரவப்பெறலே விழுமிய முறையா மென்று மொழிவர் அவ்வடியார் குழாத் தின் வேறினத்தார். 'நீலமும், மரகதமும், பவழமும் முதலியன இடை யிடை விராய முத்து வடமே கண்ணினுக் கின்பந் தருவதல்லது, முற்றும் முத்தானுய மாலை யவ்வின்பந் தருவதில்லையே' என்றும் 'உண்ணவும் நண்ண வும் உடலை மண்ணவும் உதவாதபடி ஏரி குளங்களிற் கட்டிவைத்திருக்கின்ற, நிலை நீர் நாட்குநாள் ஒளிமழுங்கி நன்மை கெடுவது; ஓயாம லோடிக்கொண் டிருக்கும் ஆற்று நீரோ தெளிவும் வடிவும் பெருகி நன்மை தருவதாகு' மென்றும் மேற்குறித்த பின்னினத்தார் போற்று முண்மையினை யுவமானங் களான் விளக்கினுர் காலஞ்சென்ற ஆசிரியர் தி. செல்வகேசவராயனுர். மொழி வளமுறற்கு இக்கருத்துச் சாலவுஞ் சிறந்ததெனை வொருபாற் கொள் ளக் கிடக்கின்ற தெனினும் தற்கால மாங்காக்குந் தலையெடுக்குந் தமிழ் நூலாசிரியர் பலர், காலவழக்குக்கூறி, வடதிசைச் சொற்களை வரைவின்றி வழங்குவதுடன், அச்சொற்கள் தம்பிறப்பொலி பொன்று திருக்கக் கருதி, தமிழிலக்கண நெறிக்கு மாறாகச் சொற்களமைத்து, அவைகளைத் தொடர் களின் நடுநடுவே நிலையிடல் சிறப்புடைத்தாமா? உதவிக்கென வந்தவனுயிரி னுக்கே உலைமூட்ட லெத்தகைய வொழுக்கத்திற் படுவது? இவ்வடியார் அன்னையார்க் காற்றுந் தொண்டு எத்தன்மைத் தென்று கூறுவது? ஆங்கில மொழி, உலக வழக்கு மொழிகளில் மேம்பட்டிருத்தல், 'இலத்தீன்' 'பிரஞ்சு' முதலாய பிறமொழிச் சொற்களை இனி தேற்றுக்கொண்டதா லன்றோ வெனின், ஆங்கிலம் அங்ஙனம் பிறசொற்களைத் தன்னினத்தோடிணைக்கு முன் அவைகட்குத் தன்னினச் சின்னங்களைச் சூட்டி யவைகளின் இயற்கை யுருவை மாற்றித் தன்னின வுருவை யேற்றிவிடுகின்றது. தமிழைச் சாரும் வடதிசைச் சொற்கள் தமிழினத்திற்குரிய வுடை, அணிகலன் முதலாய சின்னங்களை முறைமையினணியப்பெறுவன வாயின் அவைகளை ஏற்க மறுப்பாரில்லை.

### உறையுளாக்கல்.

பொதுவாய் நோக்குமிடத்துத் தமிழ் மக்களது மனை ஒவ்வொன்றும் அன் னையார்க் குறையுளாயினும், அவருக்குச் சிறப்பொடு பூசனை புரிதற்குச் சிறப் புறையுட்களும் வேண்டப்படுவன வன்றோ? வழிபாட்டினை முதற் கடனுய்க் கொள்ளுங் கல்லூரிகளே இவ்வுறையுட்களில் தலைத் தாத்தனவாம். நிகழ்த்

தப்படும் நற்பூசனையிற் பிணியுண்டு மக்கள் அன்னையினருள் பூணுதற் கெவ் வகையினு மியையும்படி இக்கல்லூரிகள் அமைக்கப்படல் வேண்டும். திருக் கோயில் திருமடம், சோற்றுவிடுதி முதலியன நிறுவும் பெரும் பொருள் படைத்தோர், தமிழ்க் கல்லூரி யாக்கலும் உயிர்க்குறுதி யளிக்குங் கருமங் களின் ஒன்றும் என்று கொண்டு நாட்டின் பகுதிகள் பலவற்றினும் இப்பணி யைச் செய்ய முந்துறலன்றோ அன்னாருக் கியைந்த வழிபாடாகும்.

கல்லூரிகள் அமைக்கப்படுவதுடன் அறிவுச் சேர்க்கைக்கும், ஆராய்ச்சி நடத்தற்கும் உதவக்கூடிய கழகங்களும் வேண்டும். இவை இப்பொழுது ஒரோ விடங்களிற் காணப்படுகின்றன. இவ்வாறின்றி பட்டினங்களிலும் ஊர்ப்புறங்களிலும் எண்ணிறந்த கழகங்கள் ஆக்கப்படல் அவசியமாகும். ஆங் காங்குள்ள கழகங்களில் ஆராய்ச்சி வாயிலாகத் தேர்ந்த கருத்துக்களைப் பிற மக்கட்கு அறிவுறுத்த வாரப் பத்திரிகைகளோ திங்கட் பத்திரிகைகளோ நிகழ்தல் வேண்டும்.

பின்னுரை.

அன்னையாரின் வழிபாட்டினுக்குற்ற துறைகள் பலதிறத்தன வாயினும் இக்கட்டுரையின் கண்ணே ஒரு சிலவே எடுத்தாளப்பட்டுள்ளன. மனமொழி மெய்களானியன்ற வளவு வழிபடுவமென்று உறுதி கொண்டார்க்குப் புதிய துறைகளும் புலப்படும். மேற்கொள்ளுந் துறை எத்தகைத்தாயினும் தம துள்ளத் தோங்கும் அன்பொன்று மாத்திரம் இருக்குமாயின் அதுவே வழி நாட்டிற்கேற்ற துணைவலியாகும். அதனையழிக்க வறுமிடையூறுகளும் தோன்றிய காலையே நாசம் அடையும். ஆகவே தமிழ மக்களாய நாம் நமது தமிழன்னையாரின் தகைமையைத் தக்கவாறுணர்ந்து, அவருக்குரிய தொண் டுத் துறைகளிற் பிணிப்புண்டு நமது வாழ்க்கையை நலன்பட நடாத்தி இன் புறுதற்கு இறைவனது இன்னருளை வேண்டி நிற்போமாக! வாழி! தமிழ் மக்கள் வாழி! வாழி தமிழன்னை.

# ஆனந்த சந்திரோதயம்

தமிழாசிரியர் S. V. வரதராஜையங்கார்.

"சொன்னதைக் கேளாதான் சுகம்பெற மாட்டான்" என்று ஒரு பழமொழியுண்டு. குருவின் வார்த்தைப்படி நடவாமல் எதையும் ஆக்ஷேபிக்கும் குணமுள்ளவன் துக்கத்தை யடைகின்றான். முன்னொரு சமயம் விபீஷணனுடைய நட்பை யடைந்த ஓர் நரன் தான் கடலில் தாராளமாய் நடக்கும்படி கிருபை செய்யவேண்டு மென்று கேட்க விபீஷணன் 'அவ்வாறே யாகுக' என்று கூறி,

நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே
தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே
சன்மமு மரணமு மின்றித் தீருமே
இம்மையே ராம வென்றிரண் டெழுத்தினல்

என ராம நாமத்தின் மான்மியத்தை உபதேசித்து, ராமநாம மடங்கிய ஒரு சீட்டை அவனுடைய முன்தானையில் முடிந்து "அடே! நீ இந்த முடிச்சை யவிழ்த்துப் பாராமல் நம்பிக்கையுடன் போனல் சமுத்திரம் உனக்கு நடந்து போகக்கூடிய தன்மையி லிருக்கும். எந்த நிமிஷத்தில் நீ சந்தேகித்து இந்த முடிச்சை அவிழ்க்க யத்தனிக்கின்றாயோ அக்கணமே முழுகி இறந்து போவாய்" என்றான். இதைக்கேட்ட அந்தணன் மிகுந்த நம்பிக்கை யுடன் கடலைத்தாண்டிப் போனன்; மறுபடியும் வந்தான். இவ்வாறு சில நாள் சமுத்திரத்தில் தாராளமாய் நடந்துபோய்க்கொண்டிருக்கையில் ஓர் வித கெட்ட எண்ணம் அவன் மனதிலுண்டாயிற்று. விபீஷணன் நம்முடைய துணியில் முடிந்திருப்பது ஏதோ ஒருவித பச்சிலைபோல் தோன்றுகிறது. அதை நாம் கண்டுகொண்டால் எல்லோருக்கும் சொல்லி விடுவோ மென்ற சந்தேகத்தால் நம்மை வீணாகப் பயமுறுத்தினர் போலும். நல்லது, அது இன்னதென்று பார்த்தே விடுவோம். பார்த்த பின் அநேகருக்கு அவ்விதப் பச்சிலையைத் துணியிற் கட்டிக் காசு சம்பாதிக்கலாம் என்று எண்ணி மெல்ல முடிச்சை யவிழ்த்தான். உடனே ஆழத்தில் முழுகிச் செத்தான். இதுபோல் எத்தனை காலம் ஈஸ்வரனிடம் நமக்கு நம்பிக்கை யிருக்கிறதோ அத்தனை காலம் வரையில்தான் நமக்குச் சகல நன்மைகளும் உண்டாகும். அத்தகைய நம்பிக்கை சிறிது குறையுமானல் நமது க்ஷேமங்களும் நசிக்கத் தொடங்கும்.

***

"பச்சைமா மலைபோல்மேனி பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா! அமரரேறே! ஆயர்தம் கொழுந்தே யென்னும்
இச்சுவை தவிர யான்போ யிந்திரலோக மாளும்
அச்சுவைபெறினும் வேண்டே னரங்கமா நகருளானே"

சாமானியமாக எல்லோரும் இந்த பாட்டைப் பிறர் சொல்லக் கேட்டோ அல்லது தாமே படித்தோ இருப்பார்கள். இது நாலாயிரப் பிரபந்தத்தி லுள்ள மிக்க அருமையான பாசுரங்களில் ஒன்று என்பதும் பிரசித்தம். இதை யருளிச் செய்தவர் தொண்டரடிப்பொடி யாழ்வார் என்பதும் தெரிந்ததே. இதை இவ்வளவு விசேஷமாகப் பக்தர்கள் பாடிப் பரவசமாகிக் கொண்டாடுவதன் விசேஷ மென்னவென்று கவனிப்போம். அரங்கமா நகருளானே! என்று பன்முறை துதித்த ஆழ்வாரை நோக்கி, பகவான் "ஆழ்வீர்! எமது பெயரைச் சொன்னவர்களுக்கு நாம் திருநாடளித்து வருகின்றோம். உமது ஸ்தோத்திரம் கேட்டு மெச்சினோம். அந்தத் திருநாட்டில் நீரும் வந்து எழுந்தருளியிரும்" என்றுகூற, ஆழ்வார், "இவ்வுலகத்திலிருந்தபடியே திருநாமத்தைச் சொல்லி அதனால் பெறக்கூடிய இனிமைக்குப் பரமபதத்தைப்போ யடைந்து அனுபவிக்கின்ற அந்த ஆனந்தானுபவமும் ஈடாகாது; ஆதலின் அது எனக்கு வேண்டாம்" என்று அருளிச் செய்கின்றார். அத்தகைய திவ்யநாமத்திற்குக் காரணனாயிருக்கின்ற எம்பெருமானை எப்படி எந்த நாமத்தைச் சொல்லி யழைப்பதென்று கருதிய ஆழ்வார் 'பச்சைமா மலைபோல்மேனி' என்றார். பசுமை, நீலம், கருமையாகிய நிறங்களை அபேதமாகக் கூறுவது கவிமரபு. எம்பெருமானுடைய காளமேகத் திருமேனிக்குப் பச்சைமாமலை உவமை கூறினார். சாமானியமான மலை பகவானுடைய துளக்கலாகா நிலைக்கும் உயர்வுக்கும் ஒப்பாகுமேயன்றி, ஆராய்ந்து காணப்புகுந்தால் கண்ணையும் நெஞ்சத்தையும் குளிர்வித்து, சம்சாரதாபங்களை யெல்லாம் போக்குந் தன்மையும் எப்போதும் தியாகம் செய்வதற்கு உரியதாக இருத்தலும், பெருங்கருணைக்கு இருப்பிடமா யிருத்தலுமான பலகுண விசேஷங்களில் ஒப்பாகாமை நோக்கி "பச்சைமாமலை" என்று பகர்ந்தார். "என்னும் இச்சுவை" என்றும் இயம்பினார். அதாவது எம்பெருமானுடைய குணானுபவங்களை அனுபவிக்க வேண்டியதில்லை; சொன்னாலே போதும்; அதுவே அமுதத்தையும் வெல்லும் அருஞ்சுவையுடையது என்று சுவை நயத்தைக்காட்டி யருளினார். "யான்போய்" என்றார் அதன்பின், கேவலம் லோக விஷயாந்தர ஞாபகமானது நீங்கப் பெறாமல் பொன்வேண்டி, மண்வேண்டி, மங்கையர் காதல்வேண்டி வாழும் நான்கூட அந்த பாக்கியத்தை அடைவதானாலும் வேண்டேன் என்றார். போய் என்றதால் அந்தப் பரமபதத்தை யடைவதிலுள்ள அருமையை விளக்கினார். "இந்திரலோகம் ஆளும் அச்சுவை இனியதன்று" என்றுகூறாது 'அச்சுவை பெறினும் வேண்டேன்" என்று உரைத்ததில் தாம் பரமபதத்தைப் பழித்தவ ராகாமல் திருநாம சங்கீர்த்தனத்தில் தமக்குள்ள ஆதர அதிசயத்தைக் காண்பித்தார். இதனால் நாம சங்கீர்த்தனத்தின் விசேஷம் விவரிக்கப்படுகின்றது.

***

"அழையா வீட்டில் நுழையா விருந்து" என்பது ஒரு பழமொழி. ஆனால் இதை எல்லா இடங்களிலும் விஷயத்திலும் அனுசரித்து விடலாகாது. ஞானத்தை வேண்டி அலைகின்றவன் இதைக் கருதமாட்டான். அவன், அந்நியர் தன்னை யழைத்து போதிக்கும் வரையில் காத்திராமல் தானே வருந்தி மகான்களைத் தேடிச்சென்று சம்பாஷணையாலும், நல்ல நூல்களின் ஆராய்ச்சியாலும், நல்லொழுக்கத்தாலும் ஞானத்தைச் சம்பாதிக்க வேண்டியவன். புஷ்பம் வண்டுகளைத் தேடிச் செல்வது வழக்க

யில்லை. வெல்லம் ஈயிருக்கு மிடத்தை ஆராய்வதில்லை. குளத்தை வெட்டி விட்டபின் தவளையைப் பிடித்து அதில் விடவேண்டியதில்லை. புஷ்பத்தின் நறுமணம் வண்டுகளை அழைக்கின்றது. அதுபோல மகான்களின் புகழ்மணம் சிஷ்யர்களை அழைக்கிறது. அழைத்த பின் வந்த வண்டுகளை ஏமாற்றுமல் மதுவைத் தருகின்றது அம்மலர். அதுபோல மகான்கள் தம்மை வந்தடைந்தவர்களின் தாபத்ரயங்களைப் போக்கி அவர்களுக்கு ஆத்ம சாந்தியான அருந்தேனை யளிக்கின்றார்கள். மகான்களே புஷ்பங்கள், அவர்களைத் தேடி ஆத்மதாபமுடைய சிஷ்யர்கள் அலைந்து கண்டுகளிக்கின்றனர். ஆனால் சிஷ்யனைத் தேடுகிற குருவும் உண்டு. இவர்கள் ஆஸ்தியில்லாதவர்களென்று எளிதில் வெளியாகி விடும்.

***

"ஞானிக்கில்லை இன்பமும் துன்பமும்" என்று சொல்லுவார்கள். ஞானிகளான சிலர் தங்கள் தேகத்தைக் காப்பாற்றுவதில் கவலை கொள்ளுகிறார்களே; அது ஏன்? அழிந்துபோகும் சரீரம் எப்படியிருந்தால் என்ன? அந்த உடம்பை ஏன் தண்ணீர் முதலியவற்றால் சுத்தம் செய்யவேண்டும்? வேளை தவறாமல் உணவு கொடுத்து காப்பதன் கருத்துதான் என்ன? வெறுங் கூடையை எவரும் அறையில் வைத்துப் பூட்டமாட்டார்கள். அது போல உயிரற்ற சரீரம் ஒரு சிறிதும் பயன்படாது. பலவித நவரத்னங்களையும் ஆபரணங்களையு முடைய கூடையை அறையில் வைத்துப் பூட்டிப் பத்திரப்படுத்துவது போல சின்மயானந்தராகிய பரமாத்மா வசிக்கும் சரீரத்தை மகான்கள் வெகு கவனமாகப் பாதுகாக்கின்றனர்.

***

"ஞானமில்லாத ஜன்மம் வீணே." மனிதப்பிறவி யெடுத்தவர்கள் இயன்ற அளவு ஞானத்தைச் சம்பாதிக்க வேண்டியது முக்கியம். அதைத் தேடாமல் கேவலம் பணத்தைமட்டும் தேடுவது அதமமானதாகும். விலங்குகள் சுயேச்சையாய்த் திரிவதுபோல் இவனும் கட்டுப்பாடின்றி சுற்றுகின்றான். பன்றி உடல் கொழுத்து அலைவதுபோல் இவனும் அலைகின்றான். நாய்க்குக் கோபம் வருவதுபோல் மனிதனுக்கும் கோபம் வந்துவிடுகிறது. காக்கைகள் பிணத்தை யடைந்து கொத்துவதுபோல் இவனும் பொருளாசையால் கண்டவர்களை யெல்லாம் கொத்துகிறான். மிகவும் துஷ்ட மிருகமான புலியைப்போல் மனிதனும் கண்டவரை துன்புறுத்துகிறான். நரியைப்போல மனிதனும் தந்திரசாலி. எருமை நல்ல தண்ணீரைப் பருகாமல், விழுந்து புரண்டு கலக்கிப் பின்பு நீரைக் குடிக்கிறது. மனிதனும் நூல்களிலுள்ள சத்தாசத் விஷயங்களைக் கவனித்து சத்தைக் கொள்ளாமல், எல்லாவற்றையும் கலக்கி, அதனால் மூளைகலங்கி, அறிவு கெட்டு மதிமயங்கித் திண்டாடித் தெருவில் நிற்கிறான். மிருகங்களுக்குள்ள சகல குணங்களும் ஆராயுமளவில் மனிதனிடம் பூரணமாயிருக்கக் காண்கிறோம். ஆனால் பிராணிகளைக் காட்டிலும் இவன் எப்படி உயர்ந்தவன்? அந்தப் பகுத்தறிவு ஒன்றால் தான் அவன் மேலான பிறவியைப் பெற்றவனென்று கருதப்படுகிறான். அப்பகுத்தறிவாவது பாவம் இன்னது, புண்ணியம் இன்னது, இதைச் செய்வது தரும், இதைச்செய்தால் பாவம் சம்பவிக்கும், இது நன்மையைத் தரும் என்று இப்படி ஆராய்ந்து நடக்கும் அறிவு ஆகும். ஆதலின், "காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டும்." "கரும்பு உள்ளபோதே

ஆலையில் ஆட்டிவிடவேண்டும்." பிறவியின் பயனையடையப் பகுத்தறிவு வழி காட்டுகின்றது. ஆதலின் அரிய இந்த ஜன்மத்திலேயே ஞானத்தைச் சம்பாதிக்க வேண்டியது மனிதனுடைய முக்கிய கடமை.

***

"கோக்கிற்கு ஒரே மதி" என்று சொல்ல நாம் கேட்டிருக்கிறோம். இதைக் குலசேகராழ்வார் ஒரு பாசுரத்தில் நன்றாக விளக்கி யிருக்கிறார். அதாவது "பகவானே! எனக்கு வேண்டியது ஒன்றே ஒன்று தான். அதைத் தவிர வேறு எதையும் நான் உன்னிடமிருந்து அபேக்ஷிக்கவில்லை. எனக்குப் பொருள் வேண்டாம், பூமி வேண்டாம், புத்திரர் வேண்டாம், கீர்த்தி வேண்டாம், சுவர்க்கம் வேண்டாம், நரகம் வேண்டாம், மோக்ஷமும் வேண்டாம். இவற்றைக் கொடுக்கவேண்டிய அவசியமே இல்லை. என்னுடைய பிராரப்த கர்மாவுக்குத் தக்கபடி எனக்குச் சுகமும் துக்கமும் உண்டாகின்றன. என்னை நரகிலிட்டாலும் சரி, சுவர்க்கத்திற்கு அனுப்பினாலும் சரி, அன்றி எனக்கு மோக்ஷமளித்தாலும் அளி. அவைகளைப்பற்றி எனக்குச் சிறிதும் விசாரமென்பது இல்லை. நான் கேட்பதெல்லாம் ஒன்றே ஒன்றுதான். நான் எந்த ஜன்மமெடுத்தாலும், எந்த லோகத்திலிருந்தாலும் உன் பாதத்தை என்மனம் பற்றவேண்டும். உன் பாதாம்புஜமாகிய பஞ்சரத்தில் என் மனமாகிய கிளி சதாகாலமும் வாஸம் செய்யவேண்டும். இந்த ஒரு பலனைக் கருதியே நான் உன்னிடம் பக்தி செலுத்துகின்றேன்."

***

"மையும் ஆமையும்" மைகளில் பலவித மைகள் உண்டு. ஒரு வித மையைக் கண்ணி லிட்டுக்கொண்டால் குளிர்ச்சி யுண்டாகும். பார்வை யதிகரிக்கும். மற்றொரு மையைக்கொண்டு துஷ்டர்கள் துர்நடத்தையுள்ள மாதர்களை வசியப்படுத்துவதாகச் சொல்லுகின்றனர். ஒரு வித மை எல்லோராலும் எழுத உபயோகப்படுத்தப்படுகிறது. இந்த மைகள் யாவும் கையையும் கண்ணையும் கருப்பாக்குகின்றன; கொஞ்சம் ஜலம் பட்டால் கருமை நீங்கிவிடுகிறது. இன்னொரு மை யுண்டு; அது யாவற்றிலும் உயர்ந்தது, மிகவும் சிலாக்யமானது, அதைத் தரித்துக்கொண்டால் சகல சம்பத்தும் உண்டாகின்றன. அந்தர்முக பகிர்முக சத்துருக்கள் அனைவரும் நாசமாவார்கள். உலகெங்கும் கீர்த்தி ஏற்படும். இதற்கு தருமனே சாக்ஷி. இந்த மை இன்னதென்று தெரியுமா? அதுதான் பொறுமை என்பது. இனி, ஆமையை கவனிப்போம். எத்தனையோ கிணறுகளில் ஆமைகள் வசிக்கின்றன. நாம் அடிக்கடி ஆமைகளைப் பார்க்கவும் நேருகின்றது. அந்த ஆமைகளால் ஜனங்களுக்கு எவ்விதமான துன்பமும் நேருகிறதில்லை. ஜலம் சுத்தமாயிருக்க அநேகர் ஆமைகளைப்பிடித்துக் கிணறுகளில் விட்டு வைப்பதுண்டு. இவ்வாமைகள் சிறியனவாயும் இயன்ற அளவு ஏதோ சிறிது உதவிபுரிவனவாயும் இருக்கின்றன. இன்னொருவகை ஆமையுண்டு, அது பெரிய திருட்டு ஆமை; மனிதர்கள் கண்ணிற்படாமல் அது ஒளிந்து திரிகின்றது. அதை மனிதர்கள் கவனியாமலிருக்கிறார்கள். அதோ மிகவும் பெரியது. அது மனிதனை மரண பரியந்தம் ஒளிந்திருந்து கொல்லுகின்றது. அது தண்ணீரில் இல்லை. பூமியிலேயே சஞ்சரிக்கிறது. சில சமயங்களில் ஆகாயத்திலும் பறந்து விடுகிறது. மனிதரைக் கண்டால் உடனே தாவிப்பிடித்துக் கொள்ளுகிறது? அந்த ஆமையின் பெயரென்ன தெரியுமா? அதுதான் பொறாமை.

# புனை பெயர்

(பண்டித - லி. ராமசாமி.)

அச்சாபீஸ்காரரோடு சண்டை போட்டுப் போட்டு அப்பொழுதே "பரஞ்சோதி" பொங்கல் மலரை வெளியேற்றி விட்டேன். பத்திரிகையைக் கையில் எடுத்து எப்படி இருக்கிறது என்று புரட்டிப் பார்த்துக்கொண் டிருந்தேன். இதற்குள் எனது நண்பன் கே. எஸ். வாசன் வந்து, நாற்காலியில் உட்கார்ந்து கொண்டே

"சாயங்காலம் மெட்ராஸுக்குப் போகவேணும் புறப்படு" என்றான்.

"மெட்ராஸுக்கா" என்றேன் ஆச்சரியத்தோடு.

"ஆமாம்! இந்தத்தடவை தவறாமல் வரவேணும்"

"சரி! எப்போது புறப்படலாம்?"

"சாயங்காலம்; 7-மணி வண்டிக்கு"

"'டைம்' ஏது சாயங்காலமானால்? அதற்குள் என்ன முழுகிப்போகும்? நாளைக்குப் போகக் கூடாதா?"

"'டாமிட்,' போ வோய், எப்போதும் இப்படியே. ஏன் சொல்லுகிறேன் என்று தெரியவில்லையே! இன்றைக்கே போகவேணும். என்ன "டைம்" வேண்டி யிருக்கிறது?"

"உனக்கென்னப்பா, எல்லாம் தயார் செய்துகொண்டு பேசுகிறாய். நான் இப்போது பயணமாக வேணுமானால்—"

"எவ்வளவு நாளாகப் போகிறது. மறுபடியும் ஐந்தாறுநாளில் திரும்பி வந்து விடுவோம் அல்லவா?"

"அதுசரி! இந்த விஷயம் நேற்றே சொல்லாமல் போய் விட்டாயே"

"அடெ! எனக்கு மாத்திரம் எப்படித் தெரியும்? நானும் நினைக்கவே இல்லை. 'கொய்ட் அன் எக்ஸ்பெக்டட்' காலமேதான் டாக்டர். சாஸ்திரி யிட மிருந்து 'வொயர்' வந்தது—தைப் பொங்கலுக்கு வரவேணும் என்று"

"ஓஹோ! இப்போது டாக்டர் சாஸ்திரி பட்டணத்திலா இருக்கிறார்?"

"இது தெரியாதா? இரண்டு மூன்று மாதமாக அவரும், அவருடைய சம்சாரமும் மகளும் அங்கேயே இருக்கிறார்கள்."

"அப்படியா........."

"சரி நான் போகட்டுமா? சாயங்காலம் நிச்சயந்தானே?"

"இனி வராமல் தீருமா? நீ என்ன லேசில் விடுகிற ஆசாமியா?"

"அச்சா...குட்பை" என்று சிரித்துக்கொண்டே புறப்பட்டான் வாசன்.

கே. எஸ். வாசனும் நானும் ஒரே வயது; ஒரே ஊர்; ஒரே கோத்திரம். ஒரே பள்ளிக்கூடத்தில் படித்தவர்கள். சிறு வயதில் சகபாடிகளோடு வெகு உல்லாசமாகக் காலங் கழித்தவர்கள். எப்படியோ பி. ஏ. வரைக்கும் படித்துப் பரீக்ஷையில் தேர்ந்த பிற்பாடு, இரண்டு பேரும் பிரிந்திருக்கும்படி நேரிட்டது. எனக்குச் சிறு வயதிலிருந்தே பத்திரிகைத் துறையில் ஒரு பைத்தியம். எப்படி எப்படியோ கஷ்டப்பட்டு "பாஞ்சோதி" என்ற ஒரு மாத சஞ்சிகையைத் தொடங்கி அவஸ்தைப் பட்டுக்கொண்டிருக்கிறேன். அவன் பி. எல். பாஸ் செய்துவிட்டு பிராக்டீஸுக்கு வந்து இரண்டு வருஷமாகிறது. இந்த மாதிரி நிலைமை ஏற்பட்டு விட்டதால் சிறுவயதில் இரண்டு பேரும் எப்படி இணைபிரியாமல் இருந்தோமோ, அந்தமாதிரி இருப்பதற்கு வகையில்லாமல் போய் விட்டது. அவ்வளவு அந்நியோந்நியம் இல்லாமல் போனாலும் ஸ்நேகம் மாத்திரம் குறையவில்லை. இன்றைக்கும் ஒரு நாளைக்கு ஒருதரமோ அல்லது ஒருநாள்விட்டு ஒரு நாளோ வந்து ஆபீஸில் என்னைப் பார்க்காமல் இருக்கமாட்டான். பெரிய குஷால் பேர்வழி; அவனிடத்தில் எல்லாம் நவீன நாகரிக மயந்தான். நான் இன்னும் கொஞ்சம் நமது பழைய தத்துவங்களைப் பிடித்துத் தொங்கிக்கொண் டிருப்பவன். ஆகையினாலே சில விஷயங்களில் மாறுபட்டாலும் அவனுக்கு நான்—எனக்கு அவன் சகாயஸ்தர்களாகவே இருந்து வருகிறோம். ஆகையினாலே இப்போது அவன் என்னைப் பட்டணத்துக்குப் பிரயாணம் ஆகவேண்டும் என்று சொன்ன மாத்திரத்தில்—கையில் பணம் அதிகம் இல்லாதிருந்தும் சரி என்று ஒப்புக்கொண்டேன். இன்னொரு காரணங்கூட உண்டு. டாக்டர் சாஸ்திரியின் மகளை வாசன் காதலித்திருப்பதாகவும், கலியாணம் செய்து கொள்ளப் போவதாகவும் ஊரெல்லாம் தெரியும். அநேகமாய் இந்த விவகாரம் ஏதாவது இருக்குமோ—அதற்கு எனது சகாயம் ஏதாவது தேவையாயிருக்குமோ என்ற எண்ணத்தோடும் சரி என்றேன்.

## 2

விடியற்காலம் 8-மணிக்கு மெயில் எழும்பூர் ஸ்டேஷன் பிளாட்பாரத்திற்கு வந்து விட்டது. வாசன் ஜன்னலில் தலையை நுழைத்து வெகு கூர்மையாகப் பார்த்துக்கொண் டிருக்கிறான். இதற்குள் பிளாட்பாரத்தில் டாக்டர் சாஸ்திரி—மனைவி—மகள் ஆகிய மூவரும் காணப்பட்டனர். பெண்கள் இரண்டுபேரும் வெகு "பேஷனபி"ளா யிருக்கிறார்கள். சுத்தமா யிருப்பதிலும், நல்ல புடவை கட்டிக்கொள்வதிலும் ஆட்சேபனை இல்லை. ஆனால் மேல்ஜோடுகளும், பூட்ஸுகளும் எதற்காகப் பெண்களுக்கு? இந்தமாதிரி நிர்ப்பயமாய் வெளியில் வந்து, தாராளமாய் உலாவுது ஏன்? என்று எனக்குள் அடங்கிக் கிடந்த உணர்ச்சி வேகத்தோடு கிளம்பி கேள்விகள் போடத் தொடங்கிற்று. நானும் அநேக பிராமண வகுப்பினரைப் பார்த்திருக்கிறேன். இருந்தாலும், பிராமண குலத்தில் பிறந்து கட்டுத்திட்டம், மட்டுமரியாதை, ஒழுங்கு முறைகளை யெல்லாம் மீறி இந்தமாதிரி தும்சம் செய்துகொண்டு யதேச்சையாய்த் திரிந்தால் எப்படிச் சகித்துக்கொண்டிருப்பது என்று நீங்களே சொல்லுங்கள். இப்பேர்ப்பட்டவர்களையா நம் வாசன் மாமியாராகவும், மனைவியாகவும் ஏற்றுக் கொள்ளப் போகிறான்? என்ற விசாரம் என் தலையைக் கிறுகிறுக்கச்செய்து விட்டது. முப்பத்தைந்து வருஷ மிருக்கும் தாயாருக்கு. இவளை எல்லா விஷயங்களிலும் கடந்து நிற்கிறாள் மகள். பதினேழு—பதினெட்டு வய

திருக்கும். தலைமயிரை வங்காள மோஸ்தரில் முடிபோட்டு அலங்கரித் திருக்கிறாள். ரோஸ்கலர் வில்க்சேலையைப் பார்சிக்காரிபோல் கட்டியிருக்கிறாள். காலில் "ஸ்லிப்பர்," கையில் "ரிஸ்ட்வாட்சு," கண்களில் கண்ணாடி, இனி என்ன வேண்டும்! இயற்கையாகவே நல்ல அழகு வாய்ந்தவள், அதோடு இந்த வெளி அலங்காரங்களும் சேர்ந்து விட்டால் சொல்லவா வேண்டும். என் அதிருப்தியை ஒரு பக்கம் ஒதுக்கிவிட்டு உண்மையைச் சொல்லுகிறேன் —அழகுக்கோ அந்தஸ்துக்கோ எந்த விதமான குறையும் இல்லை.

மெயில் நின்றது—இறங்கினோம். டாக்டர். சாஸ்திரியாரை இதுவரை ஒரே ஒரு தரந்தான் நான் கண்டு பேசினதாக எனக்கு ஞாபகம். ஆனால் அவருக்கு ஞாபகசக்தி அதிகம்.

"ஹல்லோ மிஸ்டர் சுந்தரம்—" என்று அவரே முதலில் என்னை அடையாளந் தெரிந்து அளவளாவத் தொடங்கினார். நானும் "ஓஹோஹோ" என்று மகிழ்ச்சிக்குறி காட்டி "ஷேக்ஹாண்டு" கொடுத்தேன். சாமான்களை எல்லாம் கூலிகள் மூலம் இறக்கிக்கொண்டே சாஸ்திரியின் மனைவியோடு பேசிக்கொண் டிருக்கிறான் வாசன். இதற்குள் டாக்டர் சாஸ்திரியாருக்கு என்னமோ ஞாபகம் வந்து—"வெயிட்! சுந்தரத்துக்குப் பரிசயம் இல்லை என்று நினைக்கிறேன்—திஸ் ஈஸ் மிஸ்ஸஸ் சாஸ்திரி. திஸ் மிஸ். சாஸ்திரி—மை டாட்டர்—என்று மனைவியையும் மகளையும் காட்டினார். இந்த மாதிரியான நவீன தோரணையில் எனக்கு எப்போதும் பழக்கமில்லை. ஏன் ? விருப்பமும் இல்லை. ஆகையினாலே என்ன செய்வதற்கும் தோன்றவில்லை—நமஸ்காரம் செய்வதா, ஷேக்ஹாண்டு கொடுப்பதா—? என்னமோ போலி பாவனையில் கொஞ்சம் சிரித்துக்கொண்டு நமஸ்காரம் செய்தேன். அவர்களும் சிரித்துக்கொண்டே இதில் கலந்து அங்கீகாரம் செய்து "ஓ மிஸ்டர் சுந்தரம்" என்றார்கள் ஏககாலத்தில்.

"என்ன மிஸ்டர் வாசன்—இவர்தானே "பரஞ்சோதி" எடிட்டர்?" என்று கேட்டாள் டாக்டரின் மனைவி.

"ஆமாம் இவர்தான் சுந்தரம். உன்னுடைய "மாகஜைன்" என்றால் வெகு பிரியம் இவர்களுக்கு" என்றான் வாசன் என்பக்கம் திரும்பி.

"எஸ்! எஸ்!! எல்லாரையும்விட பங்கஜம் வெகு சிரத்தையாகப் படிப்பாள்"

சுத்த வைதிக தோரணையில் "ஓகோ அப்படியா" என்று சொல்லிக்கொண்டே பங்கஜத்தைப் பார்த்தேன்.

"இன்னும் உங்கள் பொங்கல் மலர் பப்ளிஷ் ஆகவில்லையா?" என்று வெகு குதூகலத்தோடு கேட்டாள் பங்கஜம்.

"நேற்றே பப்ளிஷ் ஆய் விட்டதே"

"எங்களுக்கு வரவில்லையே இன்னும்"

"நாளைக்குவரும் என்று நினைக்கிறேன்"

"நாளைக்கா ? இல்லை. திருச்சி அட்ரஸுக்குப் போய்விட்டு இங்கு வரும் என்று நினைக்கிறேன். எப்படியானாலும் நாலைந்து நாளாகி விடுகிறது.........உங்களிடம் ஏதாவது காப்பி இருக்கிறதா?"

"ஒன்று கொண்டு வந்ததாக ஞாபகம். அதுவும் பெட்டியில்—அடியில் இருக்குமென்று நினைக்கிறேன். சாயங்காலம் எடுத்துக் கொடுக்கிறேன்"

"தட்ஸ் ஆல்ரைட் பிற்பாடு வாங்கிக்கொள்ளுகிறேன்" என்றான்.

இதற்குள் டாக்டர் சாஸ்திரியாரின் மனைவி கலந்துகொண்டு "மிஸ்டர் சுந்தரம்! ஈவினிங் போர் வீட்டுக்கு "டீ"க்கு வரவேணும்—" என்று சொல்லிவிட்டு கணவனையும் மகளையும் வாசனையும் அழைத்துக்கொண்டு புறப்பட்டாள். நான் டவுனுக்குப் பிரயாணம் ஆனேன். "யூனிவர்ஸிட்டி கிளப்"பில் தங்கி லாகாலேஜில் வாசித்துக்கொண்டிருந்த என்னுடைய நண்பனது அறையில் சாமான்களை இறக்கினேன். டாக்டர் சாஸ்திரியின் வீட்டுக்கே வரவேண்டும் என்று வாசன் வற்புறுத்தினான். ஆனால், புதிய இடம் என்பதோடு இன்னும் இங்கு வெளியிடக் கூடாத சிலகாரணங்களால் நான் அங்கு போக மறுத்து விட்டேன். அவன் அவர்களோடு அங்கேயே போனான். நான் நண்பனோடு கிளப்பில் ஸ்நானம், போஜனம் வகையறாக்களைப் பூர்த்தியாக முடித்துக்கொண்டு கொஞ்சம் களைப்பாயிருந்தமையால் படுத்துக்கொண்டேன்..............இந்த பேஷன்கள், இந்த வேஷங்கள், இந்த பாஷை, இந்தபாவனைகள்—இந்த பங்கஜம்—இதெல்லாம் என்னடா ராமச்சந்திரா!—என்று ஆலோசிக்கத் தொடங்கினேன். ஏறக்குறைய 35, 40 வயதுள்ளவள் தாய், இருபது வயதுள்ளவள் அந்தக் கலியாணமாகாத பெண்—இந்தமாதிரி அந்நிய புருஷர்—புதியவர் என்ற அச்சம் அணுவளவும் இல்லாமல்—மானம், ஈனம் இல்லாமல்—இப்படித் திரிவதுதானா நாகரிகம்? என்ன நாகரிகம் ஐயா மண்ணாய்ப்போன நாகரிகம்! குலதருமம் எங்கே? பிராமணத்வம் எங்கே? "விநாசகாலே விபரீத புத்தி"யாக அல்லவா அவர்கள் தோரணை இருக்கிறது........இந்தச் சமயத்தில் எனக்கு எப்படியோ உறக்கம் வந்து விட்டது.

## 3

உறக்கத்தினின்று எழும்போது சரியாக இரண்டரை மணி. தூங்குவதற்கு முன்பு தோன்றிய ஆலோசனைகள் எல்லாம் மறுபடியும் நினைவிற்கு வந்தன. அதற்கு முந்திய பிளாட்பாரக் காட்சியும் சம்பாஷணையுங்கூட ஞாபகத்திற்கு வந்து உடனே நாலுமணிக்கு "டீ"க்கு வரவேணும் என்ற பேச்சும் தோன்றியது. "டீ"க்குப் போவதில்லை என்று உறுதியாய் முடிவு செய்து கொண்டேன். எதற்காக ஐயா அந்த ஈனச்சோறு? "பரஞ்சோதி" வேணுமானால் ஒரு ஆள் மூலமாகவோ அல்லது வாசன் வந்தால் அவன் மூலமாகவோ பங்கஜத்துக்கு அனுப்பிவிட்டு, திரும்ப அவர்கள் முகத்தில் விழிப்பதாவது, அவர்களோடு பேச்சு வார்த்தை வைத்துக் கொள்ளுவதாவது ஒன்றுமே வேண்டியதில்லை என்று தீர்மானித்துக்கொண்டிருக்கிறேன்.

நாலு மணிக்கு இன்னும் அரை மணிநேரம் இருக்கிறது. வாசன் வருவான் என்று நினைத்திருந்தேன், ஆனால் வரவில்லை. பங்கஜத்தின் அமக்களத்தில் மூழ்கி—மூச்சு விடுவதற்குங்கூடச் சாவகாசம் இல்லாமல்—என்ன செய்துகொண்டிருக்கிறானோ என்று ஒரு ஐந்து நிமிஷநேரம் யூகித்தேன்.

இதற்குள் இன்னொரு யோசனை பிறந்தது. "டீ"க்குப் போகாமல் இருப்பது குற்றமாகி விடுமோ என்னவோ என்று தோன்றியது. ஆகாமல் போகுமா? சாஸ்திரியாரின் மனைவி "டீ"க்கு அழைக்கும்போது மௌனமாய் இருந்து விட்டேன். மௌனம் சம்மதம் என்ற சம்பிரதாயம் அவர்

களுக்குத் தெரியாமலா இருக்கும்? தவறாமல் வருவேன் என்று அவர்கள் எல்லோரும் எதிர்பார்த்துக்கொண் டிருப்பார்கள். போகாமலிருந்தால் மேதை மரியாதை தெரியாதவன் என்று பாவித்து விடுவார்களோ என்னமோ? அவமானம் செய்துவிட்டான் என்று எண்ணிக் கொள்ளவும் கூடுமல்லவா?...... "உம்" ஒன்றும் தோன்றவில்லையே..............போகட்டும் நடந்த தென்னமோ நடந்து விட்டது. இனிமேல் யோசிப்பதில் லாபம் என்ன? தெரியாமல் சிக்கிக்கொண்ட தோஷந்தானே—இந்தத் தடவை மாத்திரம் போய் விடுவது, இனிமேல் இந்த மாதிரியான விபரீத வேலைகளில் எங்கும் மாட்டிக் கொள்ளாமல் இருந்தால் சரி,.....என்று ஒருவாறு சமாதானம் செய்துகொண்டு, இதற்கு முன்பு கொண்டிருந்த அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டதோடு "ட்ரஸ்"ஸிலுங்கூடக் கொஞ்சம் சிரத்தை செலுத்தினேன். எல்லாரும் ஆண்களாகவே இருந்தால் எப்படி யிருந்தாலும் பாதகமில்லை. பெண்கள் இருக்கும் இடத்தில் கொஞ்சம் சுத்தமாக—நாஸூக்காக இருக்கவேண்டும் அல்லவா?

நான் சென்னைக்கு இதற்கு முன்பு எத்தனையோ தரம் வந்திருக்கிறேன். அதனாலே எல்லா வீதிகளும் நன்றாகத் தெரியும். ட்ராமில் ஏறி திருவல்லிக்கேணி ஹைரோட்டில் பாதித் தூரத்துக்கும் கொஞ்சம் அதிகம் சென்று இறங்கினேன். கொஞ்சம் கிழக்குத் திக்கில் தள்ளியிருக்கிறது டாக்டர் சாஸ்திரியாரின் பங்களா. கேட்டுவரை சென்று 'டைம்' பார்த்தேன். நாலடிக்க இன்னும் 10-நிமிஷம் இருக்கிறது. உடம்பில் 'ஜல்'' லடித்தது. அவர்கள் நாலுமணிக்கு வரச் சொன்னால்—நான் பத்து நிமிஷத்துக்கு முந்தியே தயாராக அங்கிருந்தால்—இவன் என்ன சுத்தப் பட்டிக் காட்டான்—நாகரிகம் தெரியாதவனா யிருக்கிறான் என்று அவர்கள் எங்கே நினைத்து விடுவார்களோ என்ற பயம் ஒரு பக்கம் மனதில் தோன்றியது. சரிதான் இந்தப் பத்து நிமிஷங்களும் கழியட்டும் பிறகே போனால் போகிறது என்று கொஞ்ச தூரம் நடந்தேன்.

சரியாக நாலு மணிக்கு உள்ளே போனேன். எல்லாரும் அளவு கடந்த கௌரவத்தோடு வரவேற்றார்கள் என்னை. காலமே பார்த்ததைவிட வெகு எழிலாக விளங்குகிறாள் பங்கஜம். இப்பொழுது காலில் மேஜோடு—ஸ்லிப்பர்கள் இல்லை; ஜரிகைச் சித்திர வேலைப்பாடு அமைந்த மஹமல் பாதரக்ஷைகள் மாட்டி யிருக்கிறாள். கோதுமை நிற காஸ்மீரஸில்க்சேலை கட்டிக்கொண் டிருக்கிறாள். கழுத்தில் லேசான தங்கச்செயின் ஒன்று மாத்திரம் மின்னிக்கொண் டிருக்கிறது. விசித்திரமாகக் கோக்கப்பட்ட மல்லிகைச் சரம் தலையில் அழகுசெய்து நிற்கிறது. கண்களிலும் கன்னங்களிலும் மடந்தைப் பருவத்தின் உற்சாகம் தாண்டவமாடிக் கொண்டிருக்கிறது. அவளைக் கண்டவுடனே இதுவரை அவள்மீது நான் கொண்டிருந்த வெறுப்பு எங்கேயோ மாயமாகப் பறந்து போய் விட்டது.

"கமின்" என்று அழைத்துக் கொண்டுபோய்ச் சோபாவில் உட்கார வைத்தாள். அவர்கள் எல்லாரும் நாற்காலிகளில் உட்கார்ந்திருக்கிறார்கள்.

"வெரி பங்க்சுவல்" என்றார் டாக்டர்.

"உஹு—ஹு—" என்று புன்முறுவலோடு அந்த சர்டிபிகேட்டை ஏற்றுக்கொண்டு, கேட்டண்டை உதயமான எனது புத்திசாலித் தனத்திற்கு மகிழ்ச்சி யடைந்தேன்.

இதற்குள் ஒருவன் வெள்ளிக் கோப்பையில் "டீ" யும், வெள்ளித் தட்டுகளில் டோஸ்டும் கொண்டுவந்து மேஜைமீது வைத்தான். அவனது முகத்தில் பிராமண தேஜஸ் இல்லாது போனால் தொலையட்டும் களையாவது இருக்க வேண்டாமா? பூணூல் இருக்கிறதோ இல்லையோ பார்க்கலாம் என்றால் என்னென்னமோ விதமாகத் தைத்த மேல்சட்டை பூர்த்தியாக மாட்டிக்கொண்டிருக்கிறான். கொஞ்சம் தைரியம் செய்துகொண்டு அவனுடையகுலம் கோத்திரங்களைக் கேட்கலாமா என்று நினைத்துக்கொண்டிருக்கும் போது "பிகின் மிஸ்டர் சுந்தரம்" என்றாள் பங்கஜம்—பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறாள். இனிமேல் செய்வதற்கு ஒன்றும் தோன்றாமல் மந்தஹாஸத்தோடு கைவைக்க ஆரம்பித்தேன். டோஸ்டு என்றால் எனக்குப் பெரிய அச்சம். இதில் கோழிமுட்டை முதலிய—இத்தகைய வஸ்துக்கள் நிரம்பியிருக்கும் என்பது எனது திடமான நம்பிக்கை. இதனால் இதுவரை ஒரு நாளாவது அதைக் கையில் தொட்டது கூட இல்லை. இப்போது அது ஒன்றுதான் இருக்கிறது சாப்பிட. மற்றவர்கள் எல்லாரும் சாப்பிட ஆரம்பித்து விட்டார்கள். இனி எல்லாருக்கும் பிந்திவிட்டால் என்னசெய்வது என்ற பயம் தோன்றியதால் இரண்டுதுண்டு எடுத்து வாயில்போட்டு கண் மூடித்திறப்பதற்குள் விழுங்கி விட்டேன். மறுமுறையும் அப்படியே இரண்டு எடுத்துக் கொண்டேன். மிச்சமான இரண்டையும் விட்டுவிட்டேன். பிறகு "டீ" குடித்து விட்டேன். இதற்கு ஒன்றும் தோஷம் இல்லை அல்லவா?

எல்லாரும் பூர்த்திசெய்த பிறகு பீச்சு'க்கு உலாவப் புறப்பட்டார்கள். "கம் எலாங்" என்றார் டாக்டர். "எஸ்! ஹி இஸ் கமிங்"—என்று எனக்குப் பேச்சுச் சிரமம் கொடுக்காமலே பங்கஜம் என் சார்பில் பதில் கொடுத்தாள். இனி போகாமலிருந்தால் நன்றாயிருக்குமா? போய்த்தீர வேண்டிய கட்டாயம் ஏற்பட்டு விட்டது. எப்படியோ புறப்பட்டு விட்டேனே யொழிய யாராவது பார்த்தால் என்ன நினைத்துக் கொள்ளுகிறார்களோ என்ற பயம் மனதை பிடுங்கித் தின்றுகொண் டிருக்கிறது. உலாவுதல் முடிந்த பிறகு "போய்விட்டு வருகிறேன்" என்றேன்.

"ஆனால் மறுபடியும் நாளைக்கு "டீ" க்கு வரவேணும்" என்றார்கள் தாயும் மகளும் இரண்டுபேரும்.

"வரமாட்டேன். மூக்காலும் வரமாட்டேன்" என்ற வார்த்தைகள் நாக்குநுனிவரை வந்தன; ஆனால் சமாளித்து உள்ளே இழுத்துக்கொண்டேன். பெண்களோடு அவ்வளவு கடினமாகப் பேசலாமா? அவர்களுடைய வாக்கு எவ்வளவு மதுரமாயிருக்கிறது. அதிலும் இவர்களைப் போன்றவர்கள் அழைப்பதை அங்கீகரியாமற் போனால் சுத்த "பூல்" என்று நினைத்து விடுவார்களோ என்னவோ?......ஆனால் உண்மைச் சங்கதியைச் சொல்லி விட்டால்தான் என்ன? என்ற எண்ணமும் பிறந்தது. பிறகு அப்படிச் சொல்லிவிடுவது பெரிய மனுஷத்தன்மைக்கு அழகாயிராதல்லவா? என்றும் தோன்றியது. சரிதான் இவ்வளவுக்கும் "டீ"க்கு வரவேணும் என்று தானே சொன்னார்கள். கட்டாயம் வரவேணும் என்று வற்புறுத்திச் சொல்லவில்லை அல்லவா? இந்த விஷயத்தைப்பற்றிப் பிறகு யோசித்துக் கொள்ளலாம் என்று மறுபடியும் விடை பெற்றுக்கொண்டு "யூனிவர்ஸிட்டி கிளப்பு"க்கு வந்து விட்டேன்.

4

மறுநாள் காலை பத்து மணிக்கு காரில் வாசன் கிளப்புக்கு வந்து என்னோடு சேர்ந்தான்.

"பங்கஜத்தை விட்டுவிட்டுவர முடிந்ததா?" என்றேன் சிரித்துக் கொண்டே.

"என்ன விட்டுவிடாமல்? நீ அனுப்பிவைத்த "பரஞ்சோதி" பொங்கல் மலரைப் பிடித்துக்கொண்டு அங்கும் இங்கும் அசையாமல் படித்துக் கொண்டிருக்கிறாள் பொழுது விடிந்ததிலிருந்து. அதற்குள் எனக்குக் கொஞ்சம் டவுனில் காரிய மிருந்ததினால் வந்தேன்" என்றான் சிகரெட்டைப் பொருத்திக் கொண்டே.

பங்கஜம் நல்ல கல்வி அறிவுள்ள பெண் என்று கேள்விப்பட்டிருக்கிறேனே யொழிய எனது "பரஞ்சோதி"யின் மீது அவ்வளவு லட்சியமும் ஆசையும் உள்ளவள் என்பது எனக்குத் தெரியாது. அதனால் மிகவும் வியப்படைந்து "என்னப்பா வாசா! ஆனால் மிஸ். பங்கஜம் நிரம்பப் படித்திருக்கிறாளா என்ன?

"நிரம்ப என்ன? க்வீன் மேரி காலேஜில் இண்டர்மீடியட்டில் வாசித்துக் கொண்டிருக்கிறாள். இங்கிலீஷில் அற்புதமான 'நாலெட்ஜ்.' வீட்டில் அசாத்தியமான லைப்ரரியே இருக்கிறதே. தமிழிலும் நல்ல பழக்கமுண்டு. அதனாலேதான் உன்னுடைய பத்திரிகையை விடாமல் படித்துக்கொண்டிருக்கிறாள். தமிழ் நாட்டில் இந்தமாதிரி பத்திரிகை வேறு இல்லை என்று ஒரு சமயம் என்னிடத்தில் சொல்லி யிருப்பதாகக்கூட எனக்கு ஞாபகம். ...........மறந்து விட்டேன். கொஞ்சம் வேலையிருக்கிறது எனக்கு. நாலு மணிக்கு "டீ"க்கு வா என்று சொல்லிவிட்டு நான் பதில் கொடுப்பதற்குள் பறந்து போய் விட்டான்.

இதிலிருந்து நான் பெரிய தடுமாற்றத்தில் விழுந்து விட்டேன். பங்கஜத்தைக் குறித்து வாசன் சொன்ன வார்த்தைகள் அவ்வளவும் என் நெஞ்சில் ஊடுருவிப் பாய்ந்து விட்டன. அவ்வளவும் உண்மைபாக இருக்குமா? உண்மையே யானால்—பங்கஜம் போன்ற பெண்மணியால் "பரஞ்சோதி" நன்மதிப்புப் பெற்றிருப்பின் இனி எனக்கு என்ன வேண்டும்? அதுவும் அல்லாமல் அவள் நல்ல கல்வி அறிவுபடைத்தவளாதலால் அவளைக்கொண்டு ஏதேனும் கட்டுரைகளோ, கதைகளோ பாட்டுக்களோ எழுதச்செய்து எனது பத்திரிகையில் போட்டு விட்டால்...........மகிழ்ச்சிப் பெருக்கால் பொங்கிப் பூரித்துப் போய் விட்டேன் நினைப்பு மாத்திரத்திலேயே. நல்ல லைப்ரெரியுங் கூட இருக்கிறதாம். கட்டாயம் பார்த்துத் தீரவேண்டும்.

வேறு எந்த ஆலோசனையும் வரவில்லை. சரியாக நாலு மணிக்கு டாக்டரின் வீட்டுக்குப் போனேன். ஃரன் ஹாலில் யாரையும் காணோம். இதென்னடா என்று எண்ணிக்கொண்டே பக்கத்தில் திரும்பி அறையின் திரையை மெல்ல விலக்கிப் பார்த்தேன். "ஈஸிச்சேரில்" பங்கஜம் சாய்ந்து கொண்டு "பரஞ்சோதி" பொங்கல் மலரை வாசித்துக்கொண் டிருக்கிறாள். சுற்றிலும் "ரோஸ்வுட்" பீரோக்களில் பல திறப்பட்ட புஸ்தகங்கள் ஒழுங்காக அடுக்கிவைக்கப்பட் டிருக்கின்றன.........திரை அசைந்ததினால் பங்கஜத்திற்கு நிழல் தெரிந்து விட்டது. ஒரு "லேடிப்பார்வை" பார்த்து விட்டு "ஓ! கமின்" என்றாள் அளவுகடந்த சிரிப்போடு. உள்ளே சென்றேன்

புன்முறுவல் பிரயத்தனம் செய்து கொண்டே. கீழே "க்வீன்ராயல்" விரிப்புப் போடப்பட் டிருக்கிறது. ஜன்னல்களிலும் வாயில்களிலும் வெண் பின்னல் திரைகள் தொங்கிக்கொண் டிருக்கின்றன. அறையின் மத்தியில் சோபாக்களும் நாற்காலிகளும் விளங்குகின்றன. வெள்ளைக்காரர் இருப் பிடங்களை மீறி நிற்கிறது அலங்காரத்தில். அங்கு வீசும் காற்றே ஒருவித மகிழ்ச்சியைத் தருகிறது. பங்கஜம் ஈஸிச்சேரிலிருந்து எழுந்து புஸ்த கத்தை அங்கேயே வைத்துவிட்டு சோபாவுக்குப் பக்கத்தில் வந்து தான் ஒன்றில் உட்கார்ந்து என்னை ஒன்றில் உட்காரச் சொன்னாள்.

"பாதர், எல்லாரும் கடைக்குப் போயிருக்கிறார்கள். வருகிற நேரமும் ஆய் விட்டது" என்றாள்.

"அப்படியா......உங்களுக்கு டிஸ்டர்ப் செய்............"

"ஓ! நோ! நோ!! என்ன டிஸ்டர்ப்? என்ன இன்னும் வரவில்லையே என்றிருந்தேன். சும்மா ஏன் இருக்கவேணும் என்று "பரஞ்சோதி"யைப் பார்த்துக்கொண் டிருந்தேன். எவ்வளவு நன்றாக நடத்துகிறீர்கள்...வெகு பணம் செலவு செய்வீர்கள் என்று நினைக்கிறேன்."

"ஆமாம்! கொள்ளைப் பணம் இழுத்து விடுகிறது. என்ன ஆனாலும் பத்திரிகை நல்ல முறையில் இருக்கவேணும் என்பதே எனது முடிவு. தமிழ்நாட்டில் "பரஞ்சோதி" ஒரு முதல் தரமான பத்திரிகையாக விளங்கச் செய்யவேணும் என்பது என்னுடைய ஆசை.

"எஸ்! தற்காலம் இதைப்போன்ற பத்திரிகை நான் அறிந்தவரை வேறொன்றில்லை. 'கெட்டப்' எல்லாம் இங்கிலீஷ் தோரணையிலேயே இருக் கிறது. அதுமாத்திர மல்லாமல் இதில் வரும் கதைகள், பாட்டுக்கள் முத லானவை எல்லாருடைய மனதையும் ரமிக்கச் செய்கின்றன என்பதில் சந் தேகமில்லை. ப்யூர் லிடரேச்சர் விஷயத்தில் தாங்கள் சிரத்தை காட்டி வருவது மிக அழகாயிருக்கிறது. போக்கற்ற சாசனங்களும் வர்த்தமானங் களும் யாருக்கு வேணும்?"

"ஆமாம்! இந்தக் காலத்தில் இம்மாதிரி பத்திரிகை மிகவும் அவசியம். எப்படியோ ஒரு வருஷம் கடந்து விட்டது."

"இது எப்போதும் நன்றாய் நடக்கும் நோடவுட்."

"ஆனால் உங்களைப்போன்றவர்களின் சகாயமும் இருக்க வேணும்"

"எந்த விதத்தில்?"

"ஏதாவது வியாசங்கள், கதைகள்............"

"எனக்கு ஒன்றும் எழுதத் தெரியாதே............"

"எழுதத் தெரியாதா? காலையில் அல்லவா வாசன் சொன்னான் உங்கள் விஷயம் எல்லாம்."

"வாட்! என்ன சொன்னார்?........"

"சொன்னான், எல்லா விவரமும் சொன்னான். நீங்கள் வருகிற சஞ்சிகைக்கு"

"நோ மிஸ்டர் சுந்தரம், அப்பப்போது ஏதாவது சின்ன பாட்டுகள், கதைகள் இவைதான் எழுதுவேன். ஆனால் வெளியிடத் தகுந்தவை என்று சொல்ல முடியாது"

"நான் பார்க்கலாமா ?......"

"இப்போது வேண்டாம்; நாளைக்கு "டீ!'க்கு வரும்போது வேணு மானால் உங்களிடம் கொடுக்கிறேன். ஒன்றுவது உபயோகமாகும் என்று தோன்றுது."

"நான் பார்ப்பேன் அல்லவா ?"

"என்ன மிஸ்டர் சுந்தரம் ! நான் உங்களை ஒன்று கேட்கலாம் என்றிருந் தேன், மறந்து விட்டேன். உங்கள் பத்திரிகையில் "மோஹனன்" என்ற பெயரால் பாட்டுகள், கதைகள் எழுதுகிறார். ஹூ இஸ் ஹீ? அவர் யார் ?"

இந்த வார்த்தைகள் என் மனதில் ஒருவித பரபரப்பையும் உணர்ச்சி யையும் உண்டாக்கத் தொடங்கின.

"உங்களுக்கு எதற்கு ?"

"எதற்கும் இல்லை. அவருடைய எழுத்துக்கள் மிகவும் நன்றாயிருக் கின்றன. நான் எழுதியவை பெரும்பாலும் அவருடைய போக்கையே தழுவியிருக்கும். அவருடைய எழுத்துக்கள்தான் எனக்கு மிகுந்த இன்ஸ் பிரேஷன்"

ஒன்றும் சொல்லாமல் சும்மா யிருந்தேன் ஐந்து நிமிஷம்.

"என்ன யோசனை செய்துகொண் டிருக்கிறீர்கள் ?"

"இவர்யார் என்று ஞாபகப்படுத்திக்கொண்டிருக்கிறேன்......நாளைக் குச் சொல்லுகிறேன்"

இதற்குள் காரில் டாக்டரும் வாசனும் வந்தார்கள்.

"டீ" குடிக்க வேறொரு அறைக்குப் போனோம்.

## 5

இரவில் "ஸெப்பி"ன் அறையில் படுத்துக்கொண் டிருக்கிறேன். தூக் கம் எங்கே வருகிறது. தலை சுற்றுகிறது. அப்ப ! அபார அநுபவம்! பங்கஜத்தின் விஷயந்தான் என்ன ?

"மோஹன"னை அவள் ஏன் பின்பற்றவேண்டும், ஆதர்சமாகக் கொள்ளவேண்டும் ? அவர் யாரென்று நான்தான் உண்மையை ஏன் சொல்ல வேண்டும்? முதன் முதலில் பங்கஜத்தைப் பார்க்கும்போது உண்டாயிருந்த எண்ணமும் இப்போதைய எண்ணமும்—அட ! எவ்வளவு மாறுதல் ! என்ன இது !

மறுபடியும் மறுநாள் நாலு மணிக்கு டாக்டர் வீட்டுக்குப் போனேன். டாக்டர் சாஸ்திரியாரும் வாசனும் எங்கேயோ வெளியில் போயிருந்தார்கள். டாக்டர் சாஸ்திரியாரின் மனைவியாரோ யாரோ முக்கியஸ்தர்களோடு பேசிக் கொண்டிருக்கிறாள். பங்கஜம் லைப்ரெரியிலேயே படித்துக்கொண் டிருக் கிறாள். சப்தம் செய்யாமல் போய் பீரோக்களில் இருந்த புஸ்தகங்களைப் பார்த்துக்கொண் டிருக்கிறேன். அடடா! என்ன சொல்ல ! பிரபல ஆங்கில நூலாசிரியர்களின் புஸ்தகங்களும் தமிழ்ப் புஸ்தகங்களும் கண்ணைக் கவரும் அழகிய பைண்டுடன், ஏராளமாக அடுக்கிவைக்கப்பட் டிருக்கின்றன.

இதற்குள் எப்படிக் கண்டு விட்டாளோ பங்கஜம் "ஹல்லோ" என்று படித்துக்கொண்டிருந்த புஸ்தகத்தை மூடிவிட்டு நாற்காலியிலிருந்து எழுந்தாள்.

நானும் அவன் பக்கமாகச்சென்று "இதென்ன வால்யூம்" என்றேன். இதுவா "பிரான்ஸ் நாவல் ரெட் லிஸீ—எக்ஸலென்ட் அல்லவா ?

"சந்தேகம் என்ன ?"

"உட்காருங்கள் ஸிடௌன்! பாதரும் அவரும் இப்போது வந்து விடுவார்கள். பைதிபை அவர் யாரென்று ஞாபகத்திற்கு வந்ததா ?

"சொல்லுகிறேன். முதலில் நீங்கள் எழுதிவைத்திருப்பதைக் காட்டவேணும்"

"ஓ ! அதை நீங்கள் மறந்திருப்பீர்கள் என்றல்லவா நினைத்தேன்"

"நெவர்! எப்படி மறக்கமுடியும்? எடுத்துக்கொண்டு வாருங்கள்."

உடனே பங்கஜம் ட்ராயரைத்திறந்து சிறிய காகிதக்கட்டை எடுத்தாள். அதற்குக் கட்டியிருந்த சில்க் ரிப்பனை அவிழ்த்து எல்லாவற்றையும் என் முன் வைத்தாள். கதைகளும் பாட்டுகளும் அதிகம் இல்லை. கொஞ்சமாகத்தான் இருக்கின்றன. அதிக உற்சாகத்தோடு பார்வையிட்டேன். "கமலையின் காதல்" என்ற கதை தென்பட்டது.

தான் மிகுந்த அழகு என்று அவளுக்கு கர்வம்—" என்று ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அளவு கடந்த மகிழ்ச்சியோடு கதையைப் படிக்க ஆரம்பித்தேன்.

" ஆனால் அவர் யார் ?"

" அவரா? சொல்லுகிறேன்—எவ்வளவு அழகாயிருக்கிறது கதை? "

" சரிதான் ! யார் சொல்லுங்கள்!"

" தெரிந்து கொள்ளுவதால் உங்களுக்கு என்ன பிரயோஜனம் ?"

" பிரயோஜனத்துக்கு அல்ல. யாரோ சொல்லித் தீரவேணும்"

" சொல்லுவது எதற்கு? அவரையே காட்டுகிறேன்.

"உண்மையில் அவ்வளவு அதிருஷ்டமா எனக்கு?"

" நம்புவீர்களா ?"

" நம்பாமல் என்ன சொல்லுங்கள்."

" மோஹனன் உங்கள் எதிரிலேயே இருக்கிறான்.

" ஓ ! நீங்களே தானா? சுந்தரம் அல்லவா உங்கள் பேர் ?"

" ஆமாம் ! பத்திரிகையில் "மோஹன"னாக அவதரித்திருக்கிறேன்."

" எதற்காக இந்தப் புனை பெயர் ?"

" அப்படி இல்லாது போனால் இப்போது இந்த விதம்......" என்று சோபாவிலிருந்து எழுந்து நின்று அவளுடைய கண்களில் ஊடுருவப் பார்த்தேன்.

அந்த மோஹனாங்கியின் வலது காதிலிருந்த "லோலக்" எனது கன்னத்தில் விழுந்தது மறு க்ஷணத்திலேயே.

" வாசன் சங்கதியோ" என்றேன் மெல்ல.

" தத் ! ஹோப்லெஸ்! வெகுளி மனுஷன்"

இந்தச் சமயத்தில், புதிதாக வெளிவந்த "மூன்பீம்ஸ்" என்ற ஆங்கில பாட்டுப் புஸ்தகத்தைப் பார்த்துக்கொண்டே வாசன் ஹாலில் உட்கார்ந்திருக்கிறான் பாவம் !- விபரம் தெரியாதவனாகி.

# பஞ்ச கிரக கூடம்

பாலஜோதிட வித்வான் வ. து. வேலு நாயகர்.

இந் நில வுலகத்தினர் சுபிட்சம், துர்பிட்சம், தனம், தானியம், ஆயுள் பலம், இம்மை, மறுமை முதலிய பலாபலன்களைப் பெற்றுய் தற்கு நவக்கிரகங்களே காரண பூதராவார்கள். எவ்வுயிரும் இலங்க இவர்களே ஆதாரமானவர்கள் என்பது வேதாகம புராணேதிகாசங்களின் சம்மதமாகும். இவர்கள் வக்கிரம், அஸ்தமனம், கெட்ட இடங்கள் ஆகியவற்றை அடைந்தால் உலக சீவர்களுக்குப் பல துன்பங்கள் சம்பவிக்குமென்பது திண்ணம். இதனை,

"கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்,
விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்"

எனவரும் சிலப்பதிகாரக் கூற்றினாலும், "மைம்மீன் புகையினும் தூமந் தோன்றினும், தென்றிசை மருங்கின் வெள்ளி யோடினும்" எனவரும் புறநானூற்றுக் கூற்றினாலும், "கோள்நிலை திரிந்திடின் மாரிவறங் கூரும், மாரிவறங்கூரின் மன்னுயிரில்லை" எனவரும் மணிமேகலை கூற்றினாலும் நன்கு விளங்கும். மேலும் "தூமகேது புவிக்கெனத் தோன்றிய, வாம மேகலை மங்கையரால் வரும்" எனப்புகல் கம்பர் திருவாக்கானும், காய்சின வெய்யோன் சேயோன் முன்செலக் கதிர்கால் வெள்ளித்தேசிகன் பின்புசென்று நடக்குமிச் செயலான் முந்நீர், தூசின உலகிற் பன்னீ ராண்டுவான் சுருங்குமென்று, பேசின நூல்கள்" எனப் புகல் பரஞ்சோதி முனிவர் திருவாக்கானும், "மகத்திற் புக்கதோர் சனியெனக்காகுய் மைந்தனே மணியே மணவாளா" எனப் புகல் சுந்தா மூர்த்தி சுவாமிகள் திருவாக்கானும் நன்கு அறியலாம்.

கிரககூடமென்பது சிற்சில கிரகங்கள் ஓரிடத்தில் (ஒரு இராசியில்) ஒன்றாகக்கூடி நிற்பதென்னப்படும். இவ்வாறாய கிரககூடம் சம்பவிக்கின் பிரஸ்தாப ஆன்றோர் திருவாக்கின்படி உலகத்திற்கே பெரும் பீடை சம்பவிக்குமென்பது திண்ணம். அப்படிக் கூடும் கிரகங்களின் எண்ணிக்கையால் அக்கூடத்தின் பெயர் வழங்கப்படுவது நூன்முறை. ஆகவே நிகழும் சுக்கில வருடம் மார்கழிமீ 11உ புதவாரம் 22 நாழிகை முதலாக ஷை மீ 14உ சனிவாரம் 20 நாழிகை வரையில் தனுவிராசியில் சூரியன், செவ்வாய், புதன், சுக்கிரன், சனி ஆகிய ஐவரும் ஒன்றுகூடி சஞ்சரிகின்றார்கள். எனவே இது "பஞ்ச கிரககூடம்" என்று வழங்கப்படும்; அதாவது ஐந்து கிரகங்களின் சேர்க்கை என்பது இதன் பொருளாகும். இப்படி கிரககூடங்கள் மூன்று முதல் எழுவரை ஓரோர் காலங்களில் சம்பவிக்கும். உலக துன்பத்திற்குக் காரணமாகிய கிரககூட நிகழ்ச்சியினாலுண்டாம் பெருந் தீமையை

மக்கள், சாந்தி, தெய்வ வழிபாடுகளின் மூலமாக நிவர்த்தி செய்துகொண்டு நன்மையை அடைய முயலுதல் மிகமிக அவசியமாகும்.

துர்பிக்ஷாதி பயம்சைவ சதுர்க்ரஹ ஸமக்விதே,
மஹாரோகபயம்ராஷ்ட்ர க்ஷயோவ்ருஷ்டி விநாஸநம்,
பஞ்சக்ரஹ ஸமாயோகே துர்பிக்ஷம் ஸங்கராதிகம்,
ந்ருபவைரம் கர்பநாஸோ ஜாயதே ஜந நாஸநம்,
த்வௌக்ரஹௌ ஜநஸம்க்ஷோபம் த்ரயோக் நந்து நராதிபம்,
சத்வாரோ ராஷ்ட்ர நாஸாய ஹந்தி பஞ்ச ஜகத்ரயம்.

என்றபடி ஐந்துகிரக சேர்க்கையினால் சுவர்க்க மத்ய பாதளம் என்னும் மூன்றுலகத்திற்கும் தீங்குண்டென்பதும், துர்பிட்சம் (பஞ்சம்) இராஜாக்களுக்குள் வைரம், கர்ப்பஸ்திரீகளுக்குப் பீடை யுண்டென்பதும் மதனரத்தின வசனம் விளக்குதலா லுணர்க. இப் பஞ்ச கிரககூடமானது மூலம், பூராடம், உத்திராடத்து முதற்பாகங் கொண்ட தனுவிராசியில் சம்பவித்தலின்.

" தத்ருக்ஷஜாதஜந்தூநாம் மஹாரோகோமஹாபயம்
அர்த்தநாஸ ஃஸ்தாநநாஸோ மாநஹாநிர் ந்ருபீடநம்
ஷண்மாஸாப் யந்தரே வாபிஹ்ர யாயுர்ஹாநி ஃ ஸ்ரீயஸ்ததா,
ஜந்மாஷ்டமத்வாதஸோராஸௌ சதுர்த்தே பஞ்சமே அபிவா,
பூர்வோக்த பலமேவாதஸ் தஸ்யா ஃ ஸாந்திம் ப்ரயத்நத ஃ"

இப்பலன் ஆறுமாதம் வரை உண்டு. ஆதலால் மக்கள் அவசியம் சாந்தி செய்துகொள்ள முயலுதல் நலம். முன் கூறிய நக்ஷத்திரங்களில் பிறந்தவர்களும், மீனம், மேடம், கடகம், விருச்சிகம் இந்த இராசிகளைச் சந்திர லக்கினமாக வுடையவர்களும் முன்னே கூறியுள நான்கு தினங்களில் எதிலேனும் சாந்தி, ஜப, தப, தான, தருமங்களைச் செய்தல் நலம்.

---

ஒரு நாவல் பிரியை:—"நான் இப்போது படித்து முடித்த நாவலில் கதாநாயகனையே காணோம்."

மற்றவன்:—"என்? வெளியிட்டவர் பெயர் இருக்கலாமே!

***

ஒருவாலிபர்:—"என்னுடைய பாட்டிக்கு நூறுவயது பூர்த்தியாகி நேற்றுத்தான் நூற்றாண்டுக் கொண்டாட்டம் நடைபெற்றது."

நண்பன்:—"என்னடா! பேரிழவு. அவளிடம் உள்ளபணம் எப்பத்தான் நம்ம கைக்கு வரும்?"

# பழம் பதி

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி. ஏ., பி. எல்.)

பன்னூற்றாண்டுகளுக்கு முன்னரே இப்பாரத நாட்டில் தோன்றி நிலை பெற்ற நாடு பாண்டிய நாடாகும். தென் நாட்டிலுள்ள மூன்நாட்டில், முன்னே தோன்றிய நாடு பாண்டிய நாடே யென்று பாவலர் கூறுவர். "பாண்டிய நாடே பழம் பதியாகும்" என்னும் பழமொழியும் இக்கருத்தை வலியுறுத்தக் காணலாம். இந்நாட்டின் தொன்மையும் செம்மையும் பல வகைச் சான்றுகளால் இனிதறியப்படும்.

அமிழ்தினுமினிய தமிழ் மொழியிலமைந்த ஐம்பெரும் காவியங்களிற் சிறந்த சிலப்பதிகாரத்தில் பாண்டிய நாட்டின் தலைநகராய் மதுரைமா நகரம் 'மூதூர்' என்று சிறப்பிக்கப்படுகின்றது.

'அதிராச் சிறப்பின் மதுரை மூதூர்'

என்று சேரநாட்டுச் செந்தமிழ்க் கவிஞராய இளங்கோவடிகள் மாட மதுரையின் பழமை பாராட்டும் முறை பண்புடையதாகும். அளந்தறியலாகாப் பழங் காலத்தில் தோன்றிய நாடுகளையும் குலங்களையும், படைப்புக்காலம் தொட்டு வருவனவாகக் கருதுதல் தமிழ் வழக்காகும். பொருமறைக் குறைகண்ட பரிமேலழகர் பழந்தமிழ் வேந்தர் மூவரையும் குறிக்கும் பொழுது படைப்புக் காலந் தொட்டு வருகின்ற தொல் குலத்தார் என்று கூறுதல் இதற்குச் சான்றாகும். இவ்வாறே ஏனைய நூலாசிரியரும் உரையாசிரியரும் பாண்டிய நாட்டைப் பழம் பதியாகவும் பாண்டிய மன்னரைப் பண்டைய மன்னராகவும் வியந்துரைக்கக் காணலாம்.

இன்னும் ஆரிய மொழியில் ஆதிகாவிய மென்று போற்றப்படுகின்ற வான்மீக ராமாயணத்தில் தமிழ் வேந்தரது ஆளுகையிலமைந்த மூன்நாடுகளும் முறையாய்க் குறிக்கப்பட்டுள்ளன. தென்றிசையிலமைந்த தேசங்களில் திருமகளைத் தேடச்சென்ற வானரங்கட்கு வழிகாட்டப் போந்த வானர வேந்தன் தென்னாட்டில் அமைந்த சேர சோழ பாண்டிய நாடுகளைச் செம்மையாய்க் கூறுகின்றான்

"Seek and search the Southern regions
rock ravine, wood and tree,
Search the empire of the Andhras,
of the sister nations three,
Cholas, Cheras and the Pandyas
dwelling by the southern sea"——*R. C. Dutt.*

Translation of Ramayana.

வடமொழியிலெழுந்த வான்மிக முனிவரது காவியத்தைத் தழுவித் தென் மொழியில் நூல் செய்த நல்லிசைக் கவிஞராய கம்பர்,

"துறக்கமுற்றார் மனமென்னத் துறைகெழுநீர்ச் சோணுநதிகடந்தால் தொல்லை
மறக்கமுற்றான் அதனயலே மறைந்துறைவர் அவ்வழிநீர் வல்லை யேகி
உறக்கமுற்றார் கனவுற்றார் எனுமுணர்வினொடும் ஒதுங்கி மணியால் ஓங்கர்
பிறக்கமுற்ற மலைநாடு நாடி அதன் தமிழ்நாட்டிற் பெயர்திர் மாதோ"

என்று மூந்நாடுகளையும் குறிக்கும் முறை கருதத் தக்கதாகும். இவ்வாறு ஆரியத்தில் எழுந்த ஆதிகாவியத்திலும், அதன்வழி நூலாயெழுந்த கம்பர் காவியத்திலும், பசுமரத் தாணிபோற் பதிந்திலங்கும் பழந்தமிழ் நாடுகளைக் கண்ட புலவர் சிலர், அவற்றை இடைச்செருகலாகக் கருதி இறுமாந்திருப்பர். அறிவு நூல்களைத் துருவும் அறிஞர் நடுநிலை வழுவித் தமது கொள்கைக்கு இசையாத இலக்கியச் சான்றுகளை இடைப் பிற வாலென்று ஒதுக்கும் முறை வருந்தத் தக்க தாகும்.

இன்னும் வடமொழியிற் பெரிய இதிகாசமாய் விளங்கும் வியாச பாரதத்தில் பாண்டுவின் மைந்தனாய விசையன் தென்னாடு போந்தபொழுது, பாண்டிய மன்னன் திருமகளை மணந்த வரலாறு கூறப்படுகின்றது. அப்பால் ஆரிய நாட்டரசனாகிய அசோகனது சாசனங்களில், தென்னாட்டுத் தனியரசுகளில் ஒன்றாகப் பாண்டிய நாடு குறிக்கப்படுகின்றது. இம்மன்னன் இற்றைக்கு இரண்டாயிரத்து நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர் ஆரியநாட்டை ஆண்டவன் என்பது ஐயமின்றி அறியப்பட்டதாகும்.

இனி இந்நாட்டின் வளங்கருதி, வணிகராய் வந்த யவனரும், சோனகரும், பாண்டிய நாட்டையும், அந்நாட்டின் தலைநகராயிருந்த கொற்கையூரையும் பல விடங்களிற் குறித்துள்ளார்கள். கொற்கையிற் குளித்த முத்து யவன மன்னரது மணி முடிகளிலும், யவனமாதரது மணிக் கழுத்திலும் அமைந்து அழகு செய்வனவாயின. பாண்டிய மன்னனும் 'கொற்கை யாளி' யென்னும் பெயர் புனைந்தான். யவன அரசரிடம் தூதுபோக்கினான். இவ்வாறு பாண்டிய மன்னனது பெயரும் பெரும் புகழும் பிற நாடுகளிற் பரவத் தலைப்பட்டன.

இத்தகைய செம்மையும் தொன்மையும் வாய்ந்த பெயரின் பொருளை ஆராய்ந்தறிதல் அவசியமன்றோ? பாண்டியன் என்னும் சொல்லின் வரலாற்றை ஆராயப் போந்த ஓர் ஆங்கில ஆசிரியர், அதனை 'பாண்டு' என்னும் வட அரசன் பெயரொடு தொடுத்து, பாண்டுவின் வழி வந்தவர் பாண்டியர் என்று கூறுவாராயினர். பாண்டவர் ஐவரின் தந்தையாகிய 'பாண்டு' மன்னன் பெயரும், தமிழ் மன்னவராகிய 'பாண்டியர்' பெயரும், சொல்லோசையில் ஒற்றுமை யுடையனவா யிருத்தலாலும், பாண்டவர் துணைவனான கண்ணன் அரசு வீற்றிருந்த மதுரை என்னும் சொல்லுக்கு நேராய் மதுரை என்னும் சொல் பாண்டிய நாட்டின் தலைநகரின் பெயராயிருத்தலாலும், பாண்டியர் பாண்டுவின் வழி வந்தோரென்று அவ்வாசிரியர் கருதுகின்றார். தொன்மையாய்த் தமிழ் நாட்டிலமைந்த நாடு நகரங்கட்கு தென்மொழியிற் பொருள் தேடுவதே பொருத்த முடையதாகும்.

இம்முறை பற்றி ஆராயும் பொழுது பண்டு என்னும் தமிழ்த்தாதுவின் அடியாய்ப்பிறந்த 'பண்டையன்' என்னும் பதமே 'பாண்டியன்' ஆயிற்றென்று கருதுதல் பொருத்த முடையதாய்த் தோன்றுகிறது. இந்நாட்டு மூந்நாடு களில் பாண்டிய நாடே பழம்பதி யென்னும் கொள்கையும் இவ்வுண்மை யை ஆதரிப்பதாகும். குமரி முனைக்குத் தென்பாலமைந்த நாடும் மலையும் ஆழிவாய்ப் பட்டழிந்த ஊழிக்காலத்தே பாண்டிய மன்னன் செழித்தோங்கி யிருந்தான் என்பது சிலப்பதிகாரத்தால் அறியப்படுகின்றது.

"பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி"

என்னும் அழகிய அடிகளின் கருத்து ஈண்டு உணரத்தக்க தாகும். ஆதிகாவியம் அருளிய வான்மீக முனிவரால், தென்பாலுள்ளதாகக் கூறப் பட்ட நெடுமலை கடலில் ஆழ்வதற்கு முன்னரே பாண்டிய மன்னன், தென் னாட்டில் வாழ்ந்து வந்தானென்றால், அவன் குலத்தின் தொன்மை சொல்லா மலே விளங்கும் அன்றோ ? ஆகவே மூந்நாடுகளுள்ளும் தொன்னாடாய் விளங் கிய நாட்டைப் 'பண்டை நாடு' என்றும், அந்நாடரசனைப் பண்டையன் என் றும் வழங்கியமை இழுக்காக மாட்டாது. புதியவீடு தோன்றும் பொழுது, முன்னைய வீட்டைப் பழைய வீடென்றழைப்பதும், புதியவீதி அமையும் பொழுது முன்னைய வீதியைப் பழையவீதி யென்றழைப்பதும், புதியவர் நிலைபெறும் பொழுது, முன்னிருந்தோரைப் பழையர் என்றழைப்பதும் இந் நாட்டு வழக்காக இன்றும் காணப்படும். ஆகவே தென்னாட்டில் அமைந்த நன்னாடுகளில் தொன்னாடாய் விளங்கிய ஓர் நாட்டிற்கு பண்டை நாடென்று பெயர் வழங்கி அது பின்னர் பாண்டிய நாடென்றாயிற்று என்று கொள்ளு தலே பொருத்த முடையதாய்த் தோன்றுகின்றது.

தமிழ் மொழியை வளர்த்த தனிப்பெருங் கழகங்களும் பாண்டிய நாட்டி லேயே அமைந்திருந்தனவென்று ஆன்றோர் கூறுவர். தென்னாட்டில் ஓங் கிய மூந்நாடுகளுள்ளும் தொன்மை வாய்ந்த நாடே செம்மை வாய்ந்த தமிழ்ச் சங்கங்களைத் தாங்கி நிற்கும் தகைமை வாய்ந்த தென்று இந்நாட்டு மக்கள் கருதினாரெனக் கூறுதல் தவறாக மாட்டாது. இத்தகைய தமிழ்க் கழகங் களின் செம்மை சான்ற நலம் மதுரைமா நகரில் நிகழ்ந்தமையாலேயே அந் நகரின் ஆற்றை "புலவர் நாவில் பொருந்திய பூங்கொடி" என்றும் அந்நகரில் வீசிய பூங்காற்றை 'புலவர் நாவிற் பொருந்திய தென்றல்' என்றும் இளங் கோவடிகள் புகழ்ந்துரைப்பா ராயினர். ஆகவே என்றும் மூவா மொழி யாகிய முத்தமிழை முன்னின்று வளர்த்த பெருமை மூது நாட்டின் தலைநக ராகிய மதுரைமா நகர்க்கே உரியதாகும்.

# "எனது தென்மலைப் பயணம்."

Miss. புஷ்பவதியம்மாள் [மாணவி.]

இவ்வுலகில் மஞ்சுதோய உயர்ந்த மலையும், ஆழ்ந்து அகன்ற ஆழியும், இயற்கை யன்னையின் வனப்பைக் காட்டும் சிறந்த சான்றுகளாக அமைந்திருக்கின்றன. இவ்விரண்டினும் மலைவளமே உலகோர் போற்றும் உயரிய மாண்புடைய தாகும். இம்மலைவளம் காண, யானும் என்தோழியர் சிலரும், எங்களுக்குக் கிடைத்த ஒரு சிறு விடுமுறையை நல்வழியில் பயன் படுத்தப் புறப்பட்டோம். நாங்கள் "தென்றல் வந்துலவும்" திருநெல்வேலியிலிருந்து புறப்பட்டு புகைவண்டியில் ஏறி மேல்திசை நோக்கிச் சென்றோம். யாங்கள் செல்லும் பாதையின் இரு மருங்கினும், வயல்களில் நெற்பயிர்கள் பச்சைப்பசேலென்று வளர்ந்திருந்து எங்கள் கண்களுக்கு ஓர் நல்விருந்தளித்தன. ஒன்றாய் இரண்டாய் பதினறு தங்குமிடங்களும் கழிந்தன. நாங்களும் தென்காசியை அடைந்தோம். தென்காசியில் இறங்கி,

> "வம்பார் குன்றம் நீடுயர் சாரல் வளர்வேங்கைக்
> கொம்பார் சோலைக் கோல வண்டியாழ்செய் குற்றலம்."

காணவேண்டுமென்று அவாவுண்டு. ஆனல் இக்குற்றலம், இக்குறுகிய காலத்தில் கண்டு ஆனந்திக்கத் தக்கதன்று என்று கருதி, அதைக் கடந்து தென்மலை நோக்கிச் சென்றோம். செங்கோட்டைக்கும், ஆரியன் காவிற்கும் இடையே, மலையைக் குடைந்து புகைவண்டி செல்வது கண்கொளாக் காட்சியா யிருந்தது. இவ்விடத்து எல்லாம் வல்ல இறைவனது பெருமையும், அவனது அருள் நலம் கனிந்து விளங்கும் மனிதனது அறிவின் ஆற்றலும், ஒருங்கே கண்டு ஆரா வுவகை யெய்தினேம்.

இவைகளைக் கடந்து, தென்மலை யென்னும் தங்குமிடத்தில் இறங்கி, கொஞ்ச தூரம் நடந்துபோய் எங்களுக்காக ஒழுங்கு செய்திருந்த ஒரு மாளிகையில் தங்கினேம். அன்றிரவு அவ்விடத்து தங்கியபொழுது, வருடத்தில் ஒன்பது மாதங்களுக்கு மேலாகவே பகலவனது கிரணத்தால் வாடிய நாங்கள், அம்மலைப் பிரதேசத்தின் குளிரால் வாடினேம். மறுநாட் காலையில் அங்கேயுள்ள புதுமைகளைக் காணப் புறப்பட்டோம். "புதியன கண்டபோது விடுவரோ புதுமைபார்ப்பார்" என்று கம்பர் கூறிய உண்மை எங்கட்கு அப்பொழுதுதான் புலப்பட்டது. பொழுது புலர்ந்ததும் மலையில் தங்கியிருந்ததும், பின்னர் கதிரவன் தன் கதிர்களை விரித்து மேலே கிளம்பும்போது, அம்மேகக் கூட்டங்கள் புகைபோல ஆவியாக மாறி, மேல் நோக்கிச் சென்றதும் ஓர் அழகிய காட்சியே யாகும். மலைச்சரிவுகளில் தேயிலைச் செடிகளையும், ரப்பர் மரங்களையும், பயிராக்குகிறார்கள். அவைகளைக் கடந்து மலையின்மேல் ஏறிச் சென்றபோது, நாங்கள் அடைந்த இன்பம் அளவிடற் கரியதாயிருந்தது. நாம் அங்கு போனல், அங்கு பார்க்க வேண்

டிய பாகம், அம்மலைப் பாகம் ஒன்றேயாகும். மேடுகளும், பள்ளங்களும், பள்ளத்தாக்குகளும், குன்றுகளும், எங்கெங்கே பார்த்தாலும் மரங்களும், செடி கொடிகளும், புற்களும், நிறைந்திருந்தது பார்ப்பவர் மனதிற்கு இன்பம் விளைவிக்கின்றன. எல்லாம் வல்ல இறைவனது அளவில் ஆற்றலை விளக்கும் இயற்கை யழகையும், மலைகளின் வளத்தையும் அறிய விரும்புவார் அங்கேயன்றி வேறெங்கேயும் அறிந்துகொள்ள முடியாது என்று துணிந்து கூறலாம்.

> " கந்த மாமலர்ச் செண்பகம் கற்பகஞ் செயலை
> சந்தமே முதலாமரத் தடம் பொழில் தவழ்ந்து
> மந்த மாருதம் வந்து வந்திமுகுறவயங்கும்
> அந்த மால்வரை வளன்வழுத் துதற்கெளிதன்றால்"

என்று தமிழ்ப் புலவர் போற்றும் மலைவளத்தின் பெருமையே பெருமை.

இதுகாறும், இயற்கையின் நலத்தில் ஈடுபட்டிருந்த நாங்கள், இனி, மனிதன் அறிவின் ஆற்றலால் இயற்றியுள்ள செயற்கை வளங்களைக் காண அவாவுற்றோம். தென்மலையின் இதன் சார்பாக, எங்கள் கவனத்தைக் கவர்ந்த இடங்கள் மூன்றேயாகும். மேல் நாட்டார்க்குக் காலைப் பானத்திற்கு முக்கியமான தேயிலைப் பக்குவம் பண்ணும் தொழிற்சாலையும், உலகிற்கு பெருத்த நன்மை புரியும் இந்திய ரப்பர் சாலையும், எக்காலத்தும் எவர்க்கும் இன்றியமையாத நெருப்புக்குச்சி செய்யும் தொழிற்சாலையும் எங்கள் கவனத்தைக் கவர்ந்தன. மலையின்மீது ஏறித் தேயிலை பக்குவம் பண்ணுமிடத்தைக் காணச் சென்றோம். அத்தொழிற்சாலை ஒரு பெரிய கட்டிடம். அதிலுள்ள இயந்திர அமைப்புகளோ அளவிறந்தன. அங்குள்ள கூலியாட்கள் மேடையின் மேற் றளங்களில் தேயிலைக் கொழுந்தை உலரவைப்பதும், பின்னர், மேற்றளத்தினின்றும் கீழ்த்தளத்திற்கு, குழாய் வழியாய் அக்காய்ந்த தேயிலைகள் வருவதும், அத்தேயிலைகளை இயந்திரங்கள் அரைப்பதும், அவ்விதம் அரைத்த பொடிகளை, பன்னுடையினால் சலித்து உலரவைத்து, அதனதன் நிறத்திற் கேற்றபடி பிரித்து பின் பெட்டிகளில் அடைத்து வைப்பதும், பார்ப்பவர் மனதைக் கொள்ளை கொள்ளுகின்றன. அநேகமாக ஒவ்வொரு செயலும் இயந்திரங்களாலேயே நடைபெறுகின்றது. இயந்திர உலகத்தின் பெருமை எங்கட்கு அப்பொழுதுதான் தெரிந்தது.

இதைக் கடந்து யாங்கள் ரப்பர் தொழிற் சாலைக்குச் சென்றோம். நாங்கள் பள்ளியில் காலணாவிற்கு வாங்குகின்ற ஒரு சிறு ரப்பர் துண்டுபோல பல துண்டுகள் செய்வதற்கு அமைத்திருக்கும் யந்திரங்களைப் பார்த்து மிகவும் ஆச்சரியமுற்றோம். நாங்கள் சென்ற இடத்தில் ரப்பர் மரங்கள் அதிகம். அம்மரங்களைச் சுற்றிலும் வெட்டி அதினின்றும் வடியும் பாலை பாத்திரங்களில் சேர்த்து, அப்பாலை தொழிற்சாலைக்குக் கூலியாட்கள் கொண்டு செல்கிறார்கள். அங்கே அதிலுள்ள மாசுமறுக்களை வடிகட்டிப் பின்னர் அப்பாலையும், ஓர்வகைத் திராவகத்தையும் கலந்து தண்ணீரில்லாத ஒரு பெரிய தொட்டியில் ஊற்றுகிறார்கள். இப்போது வெண்மையான ரப்பர் வேண்டுமானால் சோடா உப்பையும் கலந்து கொள்ளுகிறார்கள். சோடா உப்பு கலக்காத ரப்பர் மஞ்சள் நிறமுடையதாயும் சோடா உப்புக் கலந்த ரப்பர் வெண்மை நிறமுடையதாகவும் மாறுகின்றது. இது தொட்டிகளில் உறைந்த பின், இதனை யெடுத்து இயந்திரங்களில் கொடுத்து தகடுபோலாக்

கிப் பின்னர் இதற்கெனக் கட்டியுள்ள மேடைகளில் சுமார் இரண்டு வாரம் வரை உலரவைத்து விடுகிறார்கள். மஞ்சள் ரப்பரையும், கழிவு ரப்பர் பாலையும், இதே விதமாகவே தீயின் வெப்பத்தால் காய்ச்சி யெடுக்கிறார்கள். இவையெல்லாம் முடிந்ததும் வேண்டிய அளவுடைய துண்டுகளாக வெட்டி அனுப்ப வேண்டிய இடங்களுக்கு அனுப்புகிறார்கள். ஆகவே ரப்பர் தனது கதையைச் சொல்ல ஆரம்பித்தால் அதுவே ஒரு பெரிய ராமாயணமாக முடியும் போலும்! இது நிற்க.

மறு நாள் மாலை நெருப்புப் பெட்டி செய்யுமிடம் காணச்சென்றோம். சாதாரணமாக உலக வழக்கில், "உன்னால் ஒரு தீக்குச்சி செய்ய முடியுமா" என்று கூறி, தீக்குச்சியை அதன் உருவத்தைக்கருதி எளனமாகக் கூறுவது வழக்கம். ஆனால் தென்மலையில் இந்தத் தீக் குச்சிகளைச் செய்யுமிடம் போய் பார்த்த பின்னர்த் தான் தீக்குச்சி செய்வது நாம் கருதுகிற அளவில் அவ்வளவு எளிதான தொரு செயல் அல்ல என்று கண்டோம். நாங்கள் செல்லும் வழியில் பரப் பாறு என்னும் நதி ஒன்றும் ஓடுகின்றது. பாறைகளுக்கு ஊடே அந்நதி தவழ்ந்தும், இரைந்தும் வருவது, தனது உத்திரவில்லாமல் அவ்விடம் வந்த அன்னியர்களாகிய எங்கள் மேல் சீறி வருவது போல் காணப்பட்டது.

இத்துடன் நாங்கள் செல்லும் வழியிலுள்ள நீரோடைகளில் களிறுகள் தங்கள் பிடிகளுடன் புனல் வாரி யிரைத்து விளையாடிக் கொண்டிருந்தன. பரப்பாற்றின் அக்கரையில் யானைகள் அதிகம் என்று கேள்வி யுற்றோம். அக்கரையில் வெட்டிப் போட்டிருக்கும் மரங்களை யெல்லாம் யானைகளே மரமறுக்கும் யந்திர சாலையில் சேர்க்கின்றன. அம்மரங்களைச் சிறிய சிறிய துண்டுகளாக வெட்டுவதும் அந்தத் துண்டுகளில் இருக்கும் பட்டைகளைச் சீவுவதும் இயந்திர உதவியினாலேயே நடைபெறுகின்றன. இந்த மரப்பட்டைகளை, யந்திரத்தின் மற்றொரு பாகத்தில் கொடுத்த பொழுது, இந்த நெருப்புப் பெட்டிகளுக்கு மடிக்க வேண்டிய மாதிரி கோடு போட்டு வருகிறது. இப்பெட்டிகளுக்கு வர்ணம் கொடுப்பதும், மேலே தாள் ஒட்டுவதும், பெட்டிக்குள் குச்சியை அடுக்குவதும் இன்னும் இது போல்வன பிறவும் இயந்திரங்களின் உதவியினாலேயே நடைபெறுகின்றன. இது இத் தொழிற்சாலையின் ஒருபாகம். மற்றொரு பாகத்தில் தீக்குச்சிகள் செய்வதற்கு இயந்திரங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. தீக்குச்சிகளைச் சிறு சிறு துண்டுகளாக வெட்டி, சவித்து, துவாரமுள்ள தட்டுகளடங்கிய ஒரு யந்திரத்தில், ஒருயந்திரம் போடுகிறது. இந்த யந்திரம், இக்குச்சிகளைத் தட்டுகளில் உள்ள துவாரங்களில் குத்துவதும், பின்னர், ஒரு வகைத் திராவகம் குச்சியின் முனையை நனைப்பதும், பின்னும் ஒரு வகை மருந்து இக் குச்சிகளின் முனையில் பூசப் படுவதும் பார்ப்பதற்கு விநோதமாயிருந்தது. இவ்விதம் செய்யப்பட்டகுச்சுகள் பின்னர் ஒழுங்காய் பெட்டியில் அடுக்கப் படுகின்றன. இந்தத் தொழிற் சாலையில், மரம் அறுப்பதிலிருந்து, தீப் பெட்டிகள், கட்டுக் கட்டுகளாக வெளியே போகும் வரை இயந்திரங்களே எல்லா வேலையும் செய்கின்றன. இதுதான் மனிதனுடைய அறிவின் ஆற்றலையும், இயந்திர அமைப்பின் திறமையையும் உள்ளங்கை நெல்லிக் கனிபோல் விளக்குகின்றது. இந்த மூன்று தொழிற் சாலைகளைப் பார்த்து முடிந்ததும் சென்ற வழியே திரும்பி சுகமே எங்கள் கல்லூரியை அடைந்தோம். இத்துடன் எங்கள் பயணமும் முடிந்தது—விடுமுறையும் கழிந்தது வியாசமும் முற்றிற்று. திரு வருள் முன் னிற்க - சுபம்.

# தமாஷ் பேச்சு.

தாய்க்கிழவி:—அவர் முதலில் வாக்குக் கொடுத்தபடி உன்பேரில் அவருக்குப் பிரியம் அவ்வளவாக இல்லை என்று சொல்லுகிறாயே, அதற்கென்ன காரணம்?

தாசி தங்கம்:—நேற்று ராத்திரி அவர் "போய்விட்டு வருகிறேன்" என்று விடைபெற்றுக் கொண்டு போனவர் மறுபடியும் திரும்பி வந்து முத்தங் கொடுக்க வில்லை.

***

வள்ளியம்மாள்:—"உன் வைத்தியம் என்ன வைத்தியம் ஐயா! பெண்களுக்கு எமனாக அல்லவா வந்து பிறந்திருக்கிறாய்?"

வைத்தியன்:—ஏன் அம்மா அவ்வளவு கோபம்? எனக்கு ஆண்களும் ஒன்றுதான் பெண்களும் ஒன்றுதான்.

***

பெரிய மனுஷன்:—" இது என்ன? என் பெண்சாதி முகத்தில் தளும்புகளும் விழுந்திருக்கிறதே!

போட்டோகிராபர்:—"என்னை என்ன செய்யச் சொல்லுகிறீர்கள்? நீங்கள் கலியாணம் செய்யும்போதே நல்லதாய்ப் பார்த்து முடித்திருக்க வேணும்."

***

நமசிவாயம்:—" இது நான் சிறுவயதில் எடுத்தது?"

போட்டோகிராபர்:—இதை என்ன செய்யவேணும் என்கிறீர்கள்?

நமசிவாயம்:—பெரியதாக்க வேணும், வாய் மாத்திரம் சின்னதாகவே இருக்கட்டும்."

***

ட்ராம் கண்டக்டர்:—போலீஸ் ஸ்டேஷன் கடந்து விட்டதே ஏன் இன்னும் இறங்கவில்லை?

பட்டிக்காட்டான்:—என் பேரைக் கூப்பிட்ட பிற்பாடு இறங்கலாம் என்றிருக்கிறேன்.

***

ஒருவன்:—இந்த பார்க்குக்குள்ளே வந்த பிறகு என் ஜேபியிலிருந்த பத்து ரூபாய் நோட்டைக் காணோம்! கீழே விழுந்திருக்கும், நீ பார்த்தாயா?"

காவற் சேவகன்:—"இங்கே காகிதங்கள் போடக் கூடாதென்று நோட்டீஸ் போட்டிருக்கிறதை நீ பார்க்க வில்லையா? கீழே போட்டிருந்தால் உனக்கு அபராதம் போடுவார்கள்."

கட்சிக்காரன்:—இந்தக் கேசுக்கு என்ன பீஸ் வேண்டுமென்கிறீர்கள் ?

வக்கீல்:—உன் தகப்பனும் நானும் ஸ்நேகிதர்கள். அதனால் நூறு ரூபா பீஸ் கொடுத்தால் போதும். அதற்குமேல் தேவை இல்லை.

கட்சிக்காரன்:—நூறு ரூபாயா! என் பாட்டனும் நீங்களும் தெரிந்தவர்களா யிருந்தால் இருநூறு ரூபாய் கேட்பீர்கள் போலிருக்கிறது.

***

ஒருவன்:—"என்ன வாட்டமா யிருக்கிறீகள் ஏதாவது விசேஷம் உண்டா?

மற்றவன்:—ஊரில் பாங்கு திவாலாய் விட்டது. 20-லட்ச ரூபாய் நஷ்டம்.

ஒருவன்:—"அதில் உங்களுடைய தெவ்வளவு ?"

மற்றவன்:—என்னுடையது அதில் ஐந்து ரூபாய்கள்.

***

ஒருவன் தன்னுடைய நண்பன் அடுப்பங்கரையில் இருந்த ஒரு துவாரத்தில் ரூபாய்களைப் போட்டுக்கொண் டிருப்பதைப் பார்த்து.

"அடே ! உனக்கென்ன பைத்தியமா ?" என்று கேட்டான்.

நண்பன்:—"நேற்று இராத்திரி இந்த ஓட்டையில் கால் ரூபாய் விழுந்து விட்டது. இந்தக் கால் ரூபாய்க்காகக் கஷ்டப்பட்டுத் தோண்டிக்கொண் டிருப்பது கேவலம் அல்லவா என்று நினைத்து ரூபாய்களைப் போடுகிறேன்."

***

நாடகக்காரி:—"நான் நேற்று நடித்த "பிரிந்த காதலி" என்ற நாடகம் நன்றாயில்லை என்றும் அந்த ஆக்டில் எனக்குத் தோல்வி என்றும் நீங்கள் பத்திரிகையில் எழுதினீர்களாமே."

நாடகரஸிகர்:—"ஆம்! உன்னுடைய மனோரஞ்சிதமான சௌந்தரியத்தைப் பார்த்து விட்டு எவனாவது விட்டுப் பிரிய மனங்கொள்ளுவானா ?"

***

வாத்தியார்:—"ராமு ! உலகம் உருண்டையா யிருக்கிறது என்பதற்கு மூன்று உதாரணங்கள் கொடு பார்க்கலாம்."

ராமு:—"இதோ சொல்லுகிறேன் சார் ! நீங்களும் அப்படியே சொல்லுகிறீர்கள், அப்பாவும் அப்படியே சொல்லுகிறார், அம்மாவும் அப்படியே சொல்லுகிறாள்."

***

பெரிய மண்டைக் கர்வம்:—இந்தா ! நீ என்னை யார் என்று நினைத்து விட்டாய் ! நான் உயர்ந்த பெரிய குடும்பத்திலிருந்து வந்தவனாக்கும் !

கிண்டல் பேர்வழி:—"ஆமாம் ராஜா ! நீ எப்படி அங்கிருந்து புறப்பட்டு வந்து விட்டாய் !"

—லி. ரா.

# முப்பொருளுண்மை

## 1. கடவுள்

தோற்றப் பொருளைத் துணைபெறும் மக்கள்
மாற்றமுறு பொருள் எவையை நோக்காது,
பூநீர் அனல்கால் வெளியெனக் கணித்தனர்—நீதான்
மேலாய் நின்று மேவுறல் கண்டிலர்.
5. கண்ட பொருளிற் கணிப்பவ ரன்றிக்
காணாப் பொருளைக் காணுதற் கரியார்
எப்பொருள் தன்னிலும் இயங்குறும் நின்னைத்
தப்பறக் கொள்பவர் தாம், அறிவுடையோர்—நீயோ!
நானெனும் அகந்தை நாட்டினை யல்லை;
10. அதுவெனும் பெயருள் அணுகினை யல்லை;
வானெனும் தலத்தில் வசிப்பவ னல்லை;
வாங்குதல் கொடுத்தல் வழக்கினை யல்லை;
நீயே யாவுமாய் நின்றவன் அன்றோ!
நின்னோ டொப்புமை நீணிலத் துண்டோ?
15. தாயே யாவாய், தந்தையு மாவாய்,
தாரமும், பொருளும் யாவுமே யாவாய்.
நாயேன் துதியினை நவிலுமா றெங்ஙன்?
நானோ அறிவிலி! நீயோ அறிவுளை!!
வாயே வாழ்த்துக! மனமே மகிழ்க!!
20. வள்ளல் நின் திருவுளம் வைத்தவா றுறுகவே.

தொண்டைமான் முத்தையன்
திருநெல்வேலி.

---




## கிருஷ்ணஸிங் அல்லது துப்பறியும் சீடன்.

(382-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆரணி-குப்புசாமி முதலியார்.

ஆனந்:—இப்போது நீ முட்டாளைப் போல் பேசுகிறாய்.

முனி:—என்னை விடுவிக்க உனக்குத் தைரியம் இல்லையோ?

ஆனந்:—"நான் உனக்காக உண்மையாகவே விசனிக்கிறேன். எனக்குக் கொஞ்சம் அவகாசமிருப்பதால் உனக்கு நல்ல புத்தி கூறுகிறேன்" என்று அவன் கட்டுகளை அவிழ்த்தான்.

விடுதலை யடைந்ததே முனியன் தன் சட்டையை யெடுத்து மாட்டிக் கொண்டு, வெளியில் செல்லக் கதவை நோக்கி நடந்தான்.

ஆனந்தஸிங் அவனை யிழுத்து அறையின் மறுமூலைக்கு இழுத்து விட்டதும் "அடே நீ பெரும் பொய்யன், கள்ளன், கள்ளக் கையொப்பம் வைத்துக் கள்ளக் கடிதங்கள் எழுதுகிறவன்; இன்னும் அநேக வேலை செய்பவன். இந்த வேளையை நீ யென்றும் மறவாதபடி செய்கிறேன். இந்த வீட்டைச் சுத்திசெய் சீக்கிரம். இரண்டே நிமிடங்கள் தவணை தருகிறேன்" என்றான்.

முனியனே கோபத்தோடு அவன்மேல் பாய்ந்தான். ஆனந்தஸிங் ஒரு கையில் அவனைப்பிடித்து ஒரு குழந்தையைத் தூக்குவதுபோல் தூக்கி எதிர் மூலைக்கு வீசி யெறிந்தான். முனியன் "சுத்திசெய்கிறேன் சுத்திசெய்கிறேன்" என்று எழுந்து அவ்வாறே அறை முழுதும் சுத்தி செய்தான பின் ஆனந்தஸிங் "நீ பரம துஷ்டன். உன் வழக்கம்போல், பொய் கூறிக் கொண்டும், களவாடிக்கொண்டும், கள்ளக் கையொப்பங்கள் வைத்துக் கொண்டும் உதவி யில்லாத பெண் பிள்ளைகளைக் களவாடிக்கொண்டுமே யிருப்பாய். ஆனால் நான் உன்மேல் ஒரு கண் வைத்திருக்கிறே னென்றே நினை. இனி அறையை விட்டு வெளியே செல்" என்றான்.

முனியன் உடனே நடக்கத் தொடங்கினான். ஆனந்தஸிங் "சேசே அப்படி வேண்டாம்; நீ மனிதனல்ல மிருகம். மனிதன் மட்டுமே இரண்டு காலால் நிமிர்ந்து நடப்பவன்; மிருகங்கள் நான்கு கால்களால்தான் நகர்ந்து செல்ல வேண்டும். அப்படிச் செல்" என்றான்.

முனியன் அவ்வாறே நகர்ந்து அறையை விட்டுச் சென்றான். முனியன் "நாம் யாரோ ஒரு பைத்தியக்காரனிடம் சிக்கிக் கொண்டோம்" என்றே எண்ணிக் கொண்டான்.

ஆனந்தலிங்குக்கு அப்புறம் அங்கு ஒரு வேலையுமில்லை. ஆகையால் முனியன் சென்ற அரைமணி நேரங்கழித்து அறையைப் பூட்டிக்கொண்டு வெளியே சென்றான்.

அவன் வெளியில் கால் வைத்ததும் திடீரென்று சிரசில் ஒரு அடி விழுந்ததும் மூர்ச்சையாய் விழுந்து விட்டான். மறுபடி ஸ்மரணை வந்த போதுதான் கைகளுக்கு விலங்கிடப்பட்டு, வாயில் துணி யடைக்கப்பட்டு கயிறுகளால் கட்டப்பட்டு முனியனைத் தான் போட்டிருந்த மஞ்சத்திலேயே தான் கிடப்பதையும் எதிரில் குள்ளன், பிச்சன், முனியன் மூவரு மிருப் பதையும் கண்டான்.

முனியன் அவனை நோக்கி "நீ செய்ததுபோல் நானும் செய்வேன் பார்த்தாயா?" என்றான். ஆனந்தலிங் பேச முடியா விட்டாலும் குறிப் பாய் தரையை நோக்கினான். அதை யறிந்த முனியனுக்குக் கோபம் வந்தா லும் இப்போது அதைப்பற்றிப் பேசினால் தான் வீட்டைச் சுத்திசெய்த இழி வான சங்கதி மற்றபேருக்குத் தெரிந்து விடுமென்று மௌனமாயிருந்து விட்டான். பிச்சன் துரிதமாய்த் தன் நோட்டுகளுக்காகத் தேடினான். அவை யங்கிருந்தாலன்றோ அகப்படும்?

குள்ளன் பிச்சனையும் முனியனையும் அழைத்துக்கொண்டு எட்டச் சென்று என்னமோ குசுகுசுவெனச் சம்பாஷித்த பின்,

பிச்சன்:—"குள்ளா! இப்போது இவன் வாயடைப்பை யெடுத்து விடு. கூச்சலிட்டால் உடனே மூளையைச் சிதறடித்து விடலாம்" என்றான்.

அவ்வாறே வாயடைப்பு எடுக்கப் பட்டதே பிச்சன் ஆனந்தலிங்கை நோக்கி, "நீ யார்?" என்றான்.

ஆனந்:—என் பெயர் சின்னு

பிச்சன்:—அந்த பருப்பெல்லாம் வேகாது. நீ ஒரு துப்பறிபவன். உன்னை யிந்த விஷயத்தில் பிரவேசிக்கும்படி யார் தூண்டியது?

ஆன:—எந்த விஷயத்தில்? உன்னைச் சவம்போல் கட்டிடப் போடவும், அந்தக் கள்ளப்பயலை யிங்கே அடைத்துப் போடவும், அப் பெண்ணை யுங் களிட மிருந்து விடுவித்துகொண்டு போகவுமா?

பிச்சன்:—அடே! அதிகப் பிரசங்கித்தனம் செய்தாயோ உன் மண்டை யைப் பிளந்து விடுவேன்.

பிச்சன்:—குள்ளா! தீக்குழியில் நெருப்பை மூட்டு சொல்கிறேன்.

அவ்வாறே தீமூட்டப்பட்டதே பிச்சன் தீயில் தீக்கிளரும் இரும்புக் கோலைச் சொருகினான்.

குள்ளன்:—"நீ யென்ன செய்யப் போகிறாய்?" என்றான்.

பிச்சன்:—"கூறுகிறேன். இந்தப் பயல் நான் கேட்கும் கேள்வி களுக்குச் சரியான விடையளிக்காவிடின், காய்ந்த இரும்பை யிவன் கன் னத்தில் வைத்திழுக்கப் போகிறேன் மறுபடி இவன் வாயில் துணியடைத்து விட்டு" என்றான்.

பிறகு யாரும் வாய்திறக்கவில்லை. மூன்று கள்ளப் பயல்களும் கம்பி காயும் வரை பேசாமல் உட்கார்ந்துகொண்டிருந்தார்கள்.

கடைசியில் குள்ளன் மற்ற இருவரையும் சமிக்கைகாட்டி உள் அறைக்கு அழைத்துச்சென்று ஏதோ பேசியபின் மூவரும் திரும்பி வந்தார்கள்.

பிறகு பிச்சன் மட்டும் தீக்குழி யருகில் உட்கார, குள்ளனும் முனியனும் வெளியில் சென்றார்கள்.

ஆனந்தலிங் இவர்கள் எங்கு சென்றார்களென்று சிந்தித்தான். சற்று நேரம் கலவரமாகவே யிருந்தது. பிறகு திடீலென்று "ஓகோ! இவர்கள் கிட்டுவை யழைத்துவரப் போயிருக்க வேண்டுமென்று அவன் மனதிற் பட்டது. அவன்தான் இவர்களுக்கு யோசனை கூறுபவன். ஆதலால் அவன் தான் ஆனந்தலிங்கை விடைகூறும்படி செய்வான் என்று கருதினார்கள்.

ஆனந்தலிங் கிட்டுவருவதால் தனக்கு ஏதேனும் நன்மை யுண்டாகுமென்று கருதவில்லை. இத் துஷ்டர்களில் ஒருவனாவது, எந்தப் பாதகத்திற்கும் அஞ்சுகிறவ னல்ல. ஆகையால் நாம் ஒருதரம் இவர்கள் கையில் சிக்கிக் கொண்ட வரையில் கடைசியில் நம்முயிரை வாங்கியே விடுவார்கள். ஆகையால் இவர்கள் என்ன இம்சைதான் செய்தாலும் நாம் உண்மையை யெள்ளளவும் கூறலாகாதென்று ஆனந்தலிங் தீர்மானம் செய்து கொண்டான்.

கடைசியில் கிட்டுவை யழைத்துக்கொண்டு குள்ளனும் முனியனும் அறைக்குள் வந்தார்கள். வந்ததே கிட்டு "கடைசியில் நமது சுருசுருப்பான வாலிபன் துன்பத்தில் சிக்கிக்கொண்டானே?" என்றான்.

பிச்சன்:—"நாம்......முன்பு இவனைப் பேசச் செய்ய......" என்ற போது,

கிட்டு மிக்க பெருந்தன்மையோடும் உதார குணத்தோடும் கூறுபவன் போல் அபிநயித்துக்கொண்டு "நாம முன்னே இவனிடம் நியாயமாய்ப் பேசிப் பார்ப்போம" என்று கூறி ஆனந்தலிங்கை நோக்கி "வாலிபனே! நீயாரென்றும், இதில் பிரவேசித்து இம்மாதிரி யெல்லாம் ஏன் நடந்து கொண்டாயென்றும், பிச்சன் பணம் எங்கே யிருக்கிறதென்றும் இவர்கள் கேட்பதற்கு நீ பதில் கூற மறுத்தது உண்மைதானே?" என்று கேட்டான்.

ஆனந்த:—ஆம் என்று தலையசைத்தான்.

கிட்டு:—சற்று யோசித்துப்பார். நாங்கள் ஆட்டுக்குட்டிகளல்ல, நாங்கள் உன் விவகாரத்தில் வந்து பிரவேசிக்கவில்லை. நீயே யெங்கள் விவகாரங்களில் பிரவேசித்தாய். இருக்கட்டும் ஒரு ஒப்பந்தம். நீ எல்லா விஷயங்களையும் உள்ளபடி கூறிவிட்டால் உன்னை விடுதலை செய்து விடுகிறோம்.

எல்லா விஷயங்களையும் கூறிவிட்ட போதிலும் இத்துஷ்டர் கடைசியில் நம்மைக் கொன்று விடுவது உண்மை யென்பது ஆனந்தலிங்குக்குத் தெரியும். ஆகையால் அவன் மாட்டேன் என்று தலையசைத்து விட்டான்.

கிட்டு:—"பிச்சா இனி நீயுன் வேலையைச் செய்ய வேண்டியதுதான்" என்றான்.

பிச்சன் உடனே சென்று பழுக்கக்காய்ந்த இரும்புக் கம்பியைக் கொண்டுவந்து "முன்னே வலது கண்ணில் சொருகிவிட்டுப் பின்பு இடது கண்ணில் சொருகுவோம். பிறகு நாம் போய்விட்டால் காலையில் யாரேனும் வந்து இவனை விடுவித்தால் பிறகு இவன் என்ன செய்தாலும் செய்து கொள்

னட்டும்'' என்று கூறிக்கொண்டே கம்பியை யானந்தஸிங் கண்ணுக்கு நேரே நீட்டினன். ஆனந்தஸிங் உடனே கண்களை மூடிக்கொண்டான்.

கிட்டு "பொறு பொறு. அவன் பயப்படுகிறான் பாவம்! முன்னே உன்னிட மிருக்கும் மருந்தை மூகரவை. நோய் தெரியா திருக்கட்டும்'' என்றான். அவ்வாறே மூகரவைத்ததே,

பிச்சன் கிட்டுவை நோக்கினன். கிட்டு கண்ணைச் சுடவேண்டாம். எனக்குக் கோரமான காட்சியைப் பார்க்கப் பிரியமில்லை'' யென்றான்.

பிச்சன் ஆக்கிரத்தோடு "என்ன என்ன பலேபேஷ் நல்லகாரியம். இவனை இப்படியே விட்டுவிட்டுச் சென்றால், கண்களிருந்தாலும் இல்லாவிட்டாலும் நாளைக்கே நம்மெல்லாருக்கும் வழி வைத்து விடுவானே!'' என்றான்.

கிட்டு தயவாய்க் கூறுபவன் போல் புன்னகையோடு "நான் இவனை யுயிரோடு தான் விட்டுவிட்டுச் செல்லப் போகிறேன். ஆயினும் இவன் இனி நமது ஜோலிக்கு வரவேமாட்டான்'' என்றான்.

அவன் பேசிய மாதிரியால் இவன் ஏதோ ஏற்பாடு மனதில் வைத்துக் கொண்டிருக்கிறனென்று அவர்கள் தெரிந்து கொண்டார்கள்.

பிறகு கிட்டு அவர்களை நோக்கி "உள்ளறைக்குச் சென்று அங்கிருக்கும் ஜமக்காளங்கள் போர்வைகள் யாவற்றையும் எடுத்து வாருங்கள்'' என்றான்.

அவ்வாறே கொண்டுவந்த பின் கள்ளர்கள் அறையின் சாளரங்களையும் உள்ளறையின் கதவையும் மூடித்தாளிட்டுவிட்டுக் காற்று புகாதபடி சந்துகளை யெல்லாம் துணிகளால் அடைத்து ஜமக்காளம் முதலியவற்றால் மூடி விட்டார்கள்.

பிச்சன் கிட்டுவை நோக்கி "உன் யோசனை யென்ன?'' என்றான்.

கிட்டு:—மிக்க சுலபமே. இராஜவேல் மனோன்மணியைத் தூண்டி அவள் தந்தையின் பணத்தைக் களவாடிக்கொண்டு வந்து விடச்செய்து அவளை யெங்கோ மறைத்து வைத்திருக்கிறான். நாம் அவளைப்பிடித்து பாபம் தூக்கித்துக் கொண்டிருக்கும் அவள் தாய் தகப்பன்மாரிடம் கொண்டுபோய் விடப் போகும்போது, வழியில் இராஜவேல் இன்னொருவன், யாரோ வொருவன் உதவியோடு அப்பெண்ணைப் பிடித்துக் கொண்டுபோய் விட்டான். பிறகு இதில் துப்பறிபவன் வேலை செய்கிறான் என்று அறிந்து அவனை யெப்படியோ ஏமாற்றி யிங்கழைத்துவந்து இம்மாதிரி கட்டிவிட்டு அறையைப் பூட்டிக்கொண்டு புகைத் தீபங்களின் புகைகளைத் திறந்து விட்டுவிட்டு தீபங்களை யேற்றாமல் போய் விட்டான். ஜனங்கள் அப்படிக் கூறாமல் வேறென்ன சொல்வார்கள்'' என்றான். அப்புகையை யாராவது உட்கொண்டால் சீக்கிரத்தில் கொன்று விடும்.

இவ்வாறு கூறியதும் கிட்டு தன் நண்பர்களை நோக்கி, "இனி நீங்கள் வெளியிற் செல்லுங்கள். நான் புகையை வெளியில் விட்டுவிட்டு வருகிறேன்'' என்றான். அவ்வாறே மற்றக் கள்ளர்களெல்லாம் சந்தோஷமாய் வெளியிற் சென்றார்கள்.

கிட்டு பிறகு தீபங்களின் விஷப்புகைகளை யெல்லாம் திறந்து விட்டு பிறகு வெளிக் கதவையும் பூட்டிக்கொண்டு போய் விட்டான்.



# வர்த்தமானப்பகுதி

## முத்தமிடுவது குற்றமாம்:—

ஒருவரை யொருவர் வரவேற்கும் போது முத்தமிடும் வழக்கம் குற்ற மென்று ஜப்பானில் முடிவு செய் திருக்கின்ற படியால், அடிக்கடி முத் தமிடுவதாகக் காட்டக்கூடிய சினி மாப் படங்களை அந்நாட்டில் யாரும் விற்கலாகாதெனச் சட்டம் பிறப்பித் திருக்கிறார்களாம்.

## காதலால் ஏற்பட்ட தற்கொலை:—

அமெரிக்க நியூயார்க்கில், எல்லன் என்னும் சுமார் 17 வயதுடைய ஒரு பெண்பால், அட்னிக் என்னும் 20 வயதுடைய வாலிபனிடம் காதல் கொண்டிருந்தாள். அவர்கள் காதல் காரணமாக எவ்வளவோ லீலைகளை ஆடினார்கள். ஆனால் வாலிபனின் தாயார் அவ்விருவருடைய விவாகத் தைத் தடுத்துவிட்டாள். இதனால் மனம் உடைந்துபோன அப்பெண் தற்கொலை செய்துகொண்டு விட் டாள். அவள் தற்கொலைக்கு முன் தன் காதலனுக்கு ஒரு கடிதம் எழுதி வைத்துவிட்டு இறந்தாள்.

## போலி மீசையை யுடையவர்கள்:—

சிலர் மீசை தானாகவே தக்க பரு வத்தில் வளருகிறவரை பொறுத்துக் கொள்ள மனமற்றவர்களாய், போலி மீசையை வைத்துக்கொள்ளவேண்டு மென்னும் எண்ணம் இப்போது அதி கரித்து வருகிறது.

லண்டனில் மேற்குக் கோடியில் வசிக்கும் ஜனங்களின் ஒரு கூட்டத் தார் இவ்வாறு போலி மீசைகளை வைத்துக்கொள்வதில் அதிக விருப்ப முடையவர்களாக இருக்கிறார்களாம்.

## ஆகாயத்தில் நடந்த விவாகம்:—

அமெரிக்க நியூயார்க்கைச் சேர்ந்த ஸ்ரீமதி-மார்ஜரி கிளிஸ்கர் என்னும் சுமார் 18 வயதுடைய பெண்ணும், ஸ்ரீ. டொனால்டு பாப்கார் என்னும் சுமார் 20 வயதுடைய இளைஞனும் சென்ற நவம்பர் 23-ந்தேதி யன்று ஆகாய விமானத்தில் ஏறிப் பறக்கச் சென்றனர். ஆகாயவிமானம் 2,100 அடி உயரத்தில் இருக்கும்போது அவர்கள் இருவரும் விவாகம்செய்து கொண்டனர். அதை நடத்தி வைக்க 16 பேர் உடன் சென்றிருந்தார்க ளாம்.

## ஆகாய விமானத்தைத் தடுத்த இராஜாளி:—

நிவேதா மலையின்மீது அமெரிக்க சர்க்காரைச் சேர்ந்த தபால்களைக் கொண்டுபோன ஆகாய விமானத்தை ஒரு பெரிய இராஜாளி தாக்கிற்று அதனால் அந்த இராஜாளியும் இறந்து விட்ட தென்றாலும், விமானமும் பழுதாய் கீழே இறங்கவேண்டியதா யிற்று. அந்த இராஜாளி எட்டு அடி அகலமுள்ளதாக இருந்தது.

## அதிக பலனைத்தரும் பழத் தோட்டம்:—

இங்கிலாந்திலுள்ள எஸ்ஸெக்ஸ் என்னுமிடத்தில் ஒரு பழத்தோட்ட மிருக்கிறது. அதன் விஸ்தீரணம் 700 ஏக்கர். வருஷா வருஷம் 42 ஆயிரம் பவுன் மதிப்புள்ள பழங்க ளைத் தருகின்றது. இதனால் சரா சரி ஒரு ஏக்கருக்கு 20 பவுன் வீதம் லாபம் கிடைக்கிறதாம்.

### கருப்பரை வெள்ளையராக்க முயற்சி

கருப்பு நாயை வெள்ளை நாயாக ஆக்க முடியாதென்பது நம்மவர் சித்தாந்தம் ஆயினும் தற்காலத்தில் ஏற்பட்டுள்ள நவீன ஆராய்ச்சியால் பல விஷயங்களெல்லாம் தெளிவாகின்றன. அசாத்யமானதென்று நம்மவர்களால் கருதப்பட்டவைகளெல்லாம் மிக எளிதாகி வருகின்றன. ஜப்பான் ஆராய்ச்சியாளர் ஒருவர் தாம் கண்டுபிடித்திருக்கும் நூதன முறையால் காட்டுமிராண்டிகளைத் தோற்றத்திலும் குணத்திலும் நாகரீகமுள்ளவர்களாக்கி விடலாம் என்று கூறுகிறார்; மின்சார சக்தியை, தனக்கு அனுகூலமாக உபயோகித்துக் கொள்வதால் இவ்வாறு செய்ய முடியுமாம். இதனால் நீக்ரோவர்களை வெள்ளையராக ஆக்கிவிடலாமென்று சிலர் கருதுகின்றனர்.

### மரணத்திலிருந்து தப்பியவர்:—

இங்கிலாந்திலுள்ள லீஸ்டரைச் சேர்ந்த ஜான். டி. ஹாரன் என்பவர் பின் வருமாறு எழுதுகிறார். ஒரு சமயத்தில் நான் நார்த்தாம்டன் கிராமத்தின் மாதா கோயிலில் இருந்த அழகான கோபுரத்தின் அடியில் உட்கார்ந்துகொண்டிருந்தேன். என் வேலை முடிந்தபிறகு நான் எழுந்து சென்றுவிட்டேன். நான் அவ்விடத்தைவிட்டு விலகிய இரண்டு விநாடிக்குள் ஏதோ எதிர்பாராமல் திடீரென அக்கோபுரம் இடிந்து விழுந்தது. நானமட்டும் இரண்டு விநாடிகள் வரை அங்கேயே இருந்திருந்தால் நான் மரணமடைந்திருப்பேனென்பது நிச்சயம். எல்லாம் வல்ல சக்தியின் அருளால் நான் பிழைத்தேன். மரணத்திலிருந்து தப்பினேன்.

---

நேயர்களுக்கு

## ஒரு வேண்டுகோள்.

:(o):

நமது "ஆனந்தபோதினி"யின் அநுபந்தம் பொங்கல் மலராகத் தை மாதம் முதல் தேதியில் வெளியிடப்படும் என்று அறிவித்திருந்தோம். நமது "ஆனந்தபோதினி" வாரப்பத்திரிகையின் இரண்டாவது ஆண்டு சமீபித்துவிட்டமையாலும், மிகுந்த சிறப்பியல்புகளுடன் அநுபந்தம் மிளிர்தல்வேண்டும் என்ற அவா பிறந்தமையாலும், நமது தமிழ் வருஷப்பிறப்பாகிய சித்திரை முதல் தேதியில் "ஆனந்தபோதினி" மாத, வாரப்பதிப்புகளுக்குப் பொருத்தமாக நல்ல விதமான அநுபந்தம் வெளிவருதல் எல்லாருக்கும் மகிழ்ச்சியைத் தரக்கூடும் என்ற எண்ணம் தோன்றியமையாலும் சித்திரை முதல் தேதியில் ஷை அநுபந்தம் தவறாமல் வெளியிடுவதாகத் தீர்மானித்திருக்கிறோம். அதுவரை தயவு கூர்ந்து பொறுத்துக் கொள்ளுமாறு நேயர்களை வேண்டிக் கொள்ளுகிறோம். [ப-ர்]

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**சுக்கிலஞு மாசிமீ—கலியுகாதி 5031, சாலிவாகனம் 1852,**
**பசலி 1339—கொல்லமாண்டு 1105—ஹிஜரி 1348,**
**இங்கிலீஷ் 1930ஞு பிப்ரவரிமீ—மார்ச்சுமீ**

| மாசி | பிப்ரவரி. | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 12 | புத | ○ச28-18 | பூச21-38 | சித்60 | கும்பரவி நா-8-35, பௌர்ணமி, விஷ்ணுபதி புண்யகாலம் |
| 2 | 13 | வியா | பவு18-53 | ஆயி14-8 | சித்14-8அ | மாசிமகம் சில விடங்களில் |
| 3 | 14 | வெ | பிர9-58 | மக6-58 | அ6-58சித் | விவாகம், வாகனமேற |
| 4 | 15 | சனி | துதி2-3<br>திரி55-23 | பூர0-43<br>உத்55-58 | சி0-43மர | அவமாகம் |
| 5 | 16 | ஞா | சது50-30 | அஸ்52-38 | அ52-38சி | சங்காஷ்ட சதுர்த்தி |
| 6 | 17 | திங் | பஞ்47-28 | சித்51-28 | பி51-28அ | சுபகாரியங்கள் விலக்க |
| 7 | 18 | செவ் | சஷ்46-38 | சுவா52-30 | சி52-30ம | சுபகாரியங்கள் விலக்க |
| 8 | 19 | புத | சப்47-55 | விசா55-28 | சித்60 | மீனயனம் நா-19-50 |
| 9 | 20 | வியா | அஷ்51-10 | அனு60 | சித்60 | இருதினஸ்பிருக் |
| 10 | 21 | வெ | நவ55-58 | அனு0-15 | சி0-15மர | இராமதாச நவமி |
| 11 | 22 | சனி | தச60 | கே6-28 | சித்60 | குளம் கிணறு வெட்ட |
| 12 | 23 | ஞா | தச1-48 | மூல13-35 | அ13-35சி | சுபகாரியங்கள் செய்ய |
| 13 | 24 | திங் | ஏகா8-8 | பூரா21-3 | மர60 | சர்வ,மத்வ ஏகாதசி |
| 14 | 25 | செவ் | து14-38 | உத்28-38 | அ28-38சி | பிரதோஷம் |
| 15 | 26 | புத | திர20-45 | திரு35-50 | சி35-50பி | மஹா சிவராத்திரி |
| 16 | 27 | வியா | சது26-30 | அவி42-30 | சி42-30ம | |
| 17 | 28 | வெ | அ●31-25 | சத48-33 | சித்60 | |
| 18 | 1 | சனி | பிர35-28 | பூர53-45 | மர53-45சி | |
| 19 | 2 | ஞாய | துதி38-48 | உத்58-13 | அமி60 | |
| 20 | 3 | திங் | திரி41-13 | ரேவ60 | சித்60 | |
| 21 | 4 | செவ் | சது43-35 | ரே1-43 | சித்60 | |
| 22 | 5 | புதன் | பஞ்42-40 | அஸ்4-10 | மர4-10சி | |
| 23 | 6 | வியா | சஷ்41-40 | பர✕5-28 | சித்5-28ம | |
| 24 | 7 | வெ | சப்39-20 | கிரு5-33 | சி5-33மர | |
| 25 | 8 | சனி | அஷ்35-35 | ரோ4-13 | அ4-13சித் | |
| 26 | 9 | ஞா | நவ30-30 | மிரு1-38<br>திரு57-45 | சித்60 | அவமாகம், வியாதியஸ்தர் குளிக்க, கதிருக்க |
| 27 | 10 | திங் | தச24-5 | புன52-43 | அ52-43சி | சர்வ முகூர்த்தம் |
| 28 | 11 | செவ் | ஏகா16-58 | பூச47-3 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 29 | 12 | புதன் | துவா9-8 | ஆயி40-28 | சித்60 | பிரதோஷம், அவமாகம் |
| 30 | 13 | வியா | திர1-0<br>சது52-58 | மக34-33 | அ34-33சி | அவமாகம்,மாசிமகம்,விவாகம், மாடுவாங்க |

1930ஞு மார்ச்சுமீ

| | ராகு | குரு | |
|---|---|---|---|
| சுக் சூரி<br>செவ் புத | 22-கும்-புதன்<br>24-கும்-செவ்<br>24-மீன-சுக் | | |
| சனி | | கேது | |

**PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,**
**AT THE "ANANDA BODHINI" POWER PRESS,**
**LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.**